விரைவில் வெளிவருகிறது!




★ வி. குமார் ★ பி. ஜி. வெங்கடேசன் ★ டி. வி. சேதுராமன்
★ கே. ராஜேஸ்வரி ★ குமாரி வனஜா ★ கே. எஸ். அங்கமுத்து
★ பி. ஆர். மங்களம் மற்றும் பலர் நடித்தது

★

டைரக்ஷன் :

ஜவேரி & குமாரஸ்வாமி

ஸ்டுடியோ : நெப்ட்யூன் ஸ்டுடியோஸ்

கதை, வசனம் : வி. குமாரஸ்வாமி சங்கீதம் : கல்யாணரமணி

பின்னணி சங்கீதம் : ஸ்ரீமதி வைக்கம் சரஸ்வதி

★

விவரங்களுக்கு :

குஹன் பிக்சர்ஸ் லிமிடெட்

40, குக்ஸ் ரோடு :: மதராஸ் - 2

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7, இதழ் 2 | ஆகஸ்ட் 10 | சர்வசித்து ௵ ஆடி 25


| | | |
|---|---|---|
| என்ன சேதி? | ... | 5 |
| கால சக்கரம்! | சாஸ்திரி | 7 |
| வெற்றி மேல் வெற்றி! | ... | 10 |
| இரண்டு கவர்னர்கள் | ... | 13 |
| தீப்பெட்டி | கி. ரா. கோபாலன் | 19 |
| மல்லம்மா | கனகம் ராமதாஸ் | 26 |
| பாப்பா மலர் | ராஜி | 34 |
| வெண்சாமரம் | கு. ரா. | 37 |
| ராஜ விஜயம் | ஜி. எஸ். பி. | 40 |
| சரஸ்வதி பூஜை | சரோஜா ராமமூர்த்தி | 42 |
| சந்திர ஹாரம் | பிரேம்சந்த் | 46 |
| காலக்ஷேபம் | ... | 53 |




பாரத நாட்டில் நமது காலத்தில் இரண்டு அமரகவிகள் அவதரித்தார்கள். ஒருவர் தமிழ் நாட்டுப் பாரதியார் இன்னொருவர் வங்க நாட்டு ரவீந்திரநாத டாகூர். வங்க நாட்டார் தேசபக்தி, தியாகம் முதலிய அருங்குணங்களில் சிறந்து விளங்குவதுபோல் தங்கள் நாட்டுப் பெரியோர்களைப் போற்றுவதிலும் தலைசிறந்தவர்கள். ஸ்ரீ ரவீந்திரரை அவருடைய வாழ்நாட் காலத்திலேயே வங்க நாட்டார் போற்றினார்கள். அவருடைய மேதா விலாசத்தை உலகமும் அறிந்து வியந்து துதித்தது.

கவீந்திரர் டாகூர் இந்தியாவில் அமுலில் இருந்து வந்த உயிரற்ற பிரிட்டிஷ் கல்வி முறையின் சீர்கேட்டை அக்காலத்திலேயே கண்டு வெறுத்தார். பாரத நாட்டின் பண்புக்குரிய உயிர்க் கல்வி முறையை வகுத்துச் 'சாந்திநிகேதனம்' என்னும் கலைக்கூடத்தை அமைத்தார். டாகூர் உலகப் பிரசித்தி அடைந்தபோது சாந்திநிகேதனமும் அகிலமெங்கும் புகழ்பெற்றது. சில காலத்துக்குப் பிறகு சாந்திநிகேதனம் வளர்ந்து பெருகி 'விசுவபாரதி'யாக உருவெடுத்தது. உலகின் பல தேசங்களிலிருந்தும் பாரத நாட்டுக் கலைகளையும் பண்பாட்டையும் கற்றுச் செல்வதற்காக 'விசுவ பாரதி'க்கு ஆசிரியர்களும் மாணாக்கர்களும் வரத் தொடங்கினார்கள்.




ஸ்ரீ ரவீந்திரர் அமைத்து வளர்த்த 'விசுவபாரதி' ஸ்தாபனம் அவருடைய காலத்துக்குப் பிறகு சிறந்தோங்கி நடந்து வருகிறது. அந்த அகில உலக ஸ்தாபனத்தில் ஒவ்வொரு முக்கிய தேசங்களின் பாஷைகளுக்கு ஒரு 'பவனம்' ஏற்படுத்தி வருகிறார்கள். இந்த வருஷத்தில் 'தமிழ் பவனம்' ஏற்படுத்துவதற்குப் பூர்வாங்க ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள். சில மாதங்களுக்கு முன்னால் சாந்திநிகேதனத்துக்கு ராஜாஜி சென்றிருந்தபோது 'தமிழ் பவனம்' அமைக்கும் யோசனை உருக்கொண்டது. இதன் பேரில் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு அரிய பெரிய தமிழ் நூல்களை வாங்கிச் சாந்திநிகேதனத்துக்கு அனுப்பி வைத்தார்கள்.

நாளது ஆகஸ்டு மாதம் 8-ந் தேதி குருதேவர் ரவீந்திரர் திருநாள் சாந்திநிகேதனத்தில் கொண்டாடப்படுகிறது. இத் திருநாளில் 'தமிழ் பவனம்' அமைப்பது சம்பந்தமாக ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும் "கல்கி" ஆசிரியரும் அழைக்கப்பட்டார்கள்.

மேற்படி அழைப்பை ஒப்புக்கொண்டு ரஸிகமணியும், கல்கி ஆசிரியரும், அவர்களுடன் ஸ்ரீ சின்ன அண்ணாமலையும் ஆகஸ்டு மாதம் 4-ந் தேதி ஆகாய விமானத்தில் பிரயாணமானார்கள் என்னும் செய்தியை "கல்கி" நேயர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.



மலர் 7 } தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 2

# என்ன சேதி?

## ஹிஸ் எக்ஸலென்ஸி ராஜாஜி

மாகாண கவர்னர்களின் நியமனம் சம்பந்தமாக நமது மாபெருந் தலைவர் ராஜாஜியின் பெயர் பத்திரிகைகளில் அடிக்கடி வந்தபோது, முதலிலெல்லாம் நாம் அதை நம்பவில்லை. முக்கியமாக, சென்னை மாகாணத்துக்கு ராஜாஜி கவர்னராக வருவார் என்ற வதந்தியில் நாம் சிறிதும் நம்பிக்கை கொள்ளவில்லை. ஆனால், "மேற்கு வங்காளத்துக்கு ராஜாஜி கவர்னர் ஆகலாம்" என்று பத்திரிகைகளில் வந்ததும், "இது உண்மைச் செய்தியாகவே இருக்கும்!" என்ற நம்பிக்கை உடனே ஏற்பட்டது. ஏனெனில், மற்றவர்கள் கஷ்டம் என்று நினைத்துக் கைவிடும் காரியங்களை ஏற்பது ராஜாஜியின் இயல்பு என்பதை அறிவோம் அல்லவா? கல்கத்தாவைத் தலைநகராகக் கொண்ட மேற்கு வங்காளம் சமீபத்தில் புதிதாகப் பிரிக்கப்பட்ட மாகாணம். நேற்று வரையில் அங்கு நடந்த ஜனாப் சுஹ்ராவர்த்தியின் நிர்வாகத்தின் கீழ் எத்தனையோ துன்பங்களுக்கு ஆளாகிப் பெரிதும் சீர்கேடு அடைந்திருப்பது. ஆனால், கல்வியிலும் கலையிலும் அறிவிலும் புலமையிலும் தேசபக்தியிலும் சுதந்திர வெறியிலும் இந்தியாவிலேயே தலைசிறந்தவர்களான வங்காளிகள் வாழும் மாகாணம். சமீபத்தில் அத்தகைய மாகாணத்தின் நிர்வாகப் பொறுப்பேற்ற வங்கத் தலைவர்கள் நமது தமிழ் நாட்டின் ஒப்பற்ற தலைவரைத் தங்கள் புது மாகாணத்தின் முதல் சுதந்திரக் கவர்னராகக் கோரிப் பெற்றார்கள் என்பது தமிழ் மக்களுக்கெல்லாம் ஒப்பற்ற பூரிப்பையும் பெருமையையும் அளிக்கும் சம்பவம். ஆகஸ்டு 15ல் பாரத தேசம் சுதந்திரம் அடைந்த வைபவத்தை நாம் கொண்டாடும்போது நமது தலைவர் வங்காளத்தின் கவர்னர் ஆன வைபவத்தையும் சேர்த்துக் கொண்டாடலாம்.

## காதில் விழுகிறது

வரும் ஆகஸ்ட் 14-ம் தேதி இரவு 'டாண்' என்று மணி 12 அடித்ததும் பாரத தேசம் முழுவதும் சுதந்திர நாடாகி விடும்.

மங்களகரமான இந்தச் சுபதினத்தைக் கொண்டாடுவதற்காக தேசம் முழுவதும் பிரமாதமான ஏற்பாடு செய்து வருகிறது. எங்கும் ஒரே குதூகலமும் கோலாகலமும் உற்சாகமும் பொங்கித் ததும்புகின்றன.

இப்படி தேசம் முழுவதும் சந்தோஷத் திருநாளிலே அமளி துமளிப்பட்டுக்கொண்டிருக்கும் இந்தச் சமயத்திலே, நமக்குத் தெற்கே உள்ள திருவாங்கூரின் ஒரு மூலையிலிருந்து "எங்களை மறந்து விட்டீர்களா?" என்று ஏக்கத்துடன் யாரோ கேட்கும் ஓசை நம் காதில் விழுகிறது.

தற்போது பிரிட்டிஷ் இந்தியாவின் தெற்கு எல்லையாகக் கருதப்படும் திருநெல்வேலி ஜில்லாவை அடுத்த பகுதியிலே அதாவது, திருவாங்கூர் சமஸ்தானத்திலே பதினைந்து லட்சம் தமிழர்கள் வாழ்கிறார்கள் என்பது ரொம்பப் பேருக்குத் தெரியாது. தமிழ் மக்கள் வாழும் அந்தப் பகுதி திருவாங்கூர் சமஸ்தானத்திலே ஏறக்குறைய மூன்றில் ஒரு பங்கு விஸ்தீரணம் கொண்டதாகும். அது மாத்திரம் அல்ல. திருவாங்கூர் சமஸ்தானத்திலே ரொம்பவும் செழிப்பான பகுதிகளில் அதுவும் ஒன்று. தற்போது உலகத்தை ஆட்டி வைக்கும் 'அணு குண்டு' செய்வதற்கு முக்கிய உலோகமாகக் கருதப்படும்

தோரியம் என்ற உலோகமும் அங்கே கிடைக்கிறது.

மலையாள ராஜ்யமாகிய இந்தத் திருவாங்கூர் சமஸ்தானத்திலே வாழும் நம் சகோதரத் தமிழ் மக்களுக்கு அங்கு அரசியல் துறையிலோ, பொருளாதாரத் துறையிலோ ஒருவிதமான வசதியும் இல்லை. அவர்கள் தங்கள் பாஷையையோ கலையையோ கலாசாரத்தையோ வளர்ப்பதற்கான சௌகரியம் எதுவும் இல்லை. தமிழர்கள் வசிக்கும் பெரும்பாலான பகுதிகளில் பள்ளிக்கூடங்களே இருப்பதில்லை. பள்ளிக்கூடங்கள் இருந்தாலும் அங்கே தமிழ் கற்பிக்கப்படுவதில்லை. சட்டசபையிலும் போதிய பிரதிநிதித்வம் கிடைப்பது இல்லை.

## நியாயத்துக்கு இணங்குக!

இவ்விதம் வெகு காலமாகக் கஷ்டப்பட்டு வரும் அவர்கள், கொஞ்ச காலத்துக்கு முன்பு 'திருவாங்கூர் தமிழ் நாடு காங்கிரஸ்' என்பதாக ஒரு ஸ்தாபனத்தை அமைத்து, தங்கள் உரிமைகளுக்காகத் தீவிரமாகக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள். இவர்கள் சென்ற வாரம் சென்னைக்கு வந்து, ஒரு பொதுக் கூட்டமும் கூட்டினார்கள். அதில் தங்கள் லட்சியம் என்னவென்பதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். அதாவது, கேரள தேசம் முழுவதையும் ஐக்கிய கேரள நாடாக அமைக்கும்போது, திருவாங்கூரில் தமிழர்கள் பெரும்பான்மையாக வசிக்கும் பகுதிகளைத் தமிழ் நாட்டுடன் சேர்த்துவிட வேண்டும். அதுவரை, தமிழர்கள் வசிக்கும் அந்தப் பகுதியை எல்லாம் திருவாங்கூர் சமஸ்தானத்தின் கீழ் ஒரு தனி மாகாணமாக அமைக்க வேண்டும் என்பதே யாகும்.

இந்தக் கோரிக்கை முற்றிலும் நியாயமானது என்பதை யாரும் மறுக்கவே முடியாது. ஐக்கிய கேரளத்தை அமைப்பதற்காகப் பாடுபடும் கேரளத் தலைவர்கள், தமிழ் மக்களின் கோரிக்கையில் உள்ள நியாயத்தை உணர்ந்து அதை ஆதரிப்பார்கள் என்று கருதுகிறோம்.

## பெருமை கிடைக்கட்டும்!

ஆகஸ்ட் 15-ம் தேதி சுதந்திர தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடுவதற்காகச் சென்னை சர்க்கார் மற்ற மாகாண சர்க்கார்களைப் போலவே பிரமாதமான ஏற்பாடுகளைச் செய்து வருகிறார்கள்.

அந்த ஏற்பாடுகளிலே இன்னொரு முக்கியமான ஏற்பாட்டையும் சர்க்கார் சேர்த்துக் கொண்டால் அது அவர்களுக்குப் பெருமை அளிப்பதுடன், சென்னை மாகாண வாசிகளாகிய நாம் சுதந்திர தினத்தை நல்ல முறையில் கொண்டாடிய பெருமையையும் அடைந்தவர்களாவோம்.

சுதந்திர தினமாகிய அன்று மாத்திரம் இந்த மாகாணத்தில் உள்ள எல்லாக் கள்ளுக் கடைகளையும் சாராயக் கடைகளையும் கட்டாயம் மூடும்படியாகச் சென்னை சர்க்கார் உத்தரவு பிறப்பிக்க வேண்டும். பாரத தேசத்துக்கும் சென்னை மாகாணத்துக்கும் புது வாழ்வு பிறக்கப் போகும் அன்றைய தினம், யாராவது குடித்துவிட்டுத் தெருவில் அலைந்தால் அதைப் போல நமக்கு அவமானம் விளைவிக்கத் தக்க காரியம் வேறு எதுவும் இல்லை. தவிரவும், காங்கிரஸினுடையவும் காந்திஜியினுடையவும் முக்கிய லட்சியம் தேச சுதந்திரத்துக்கு அடுத்தபடியாக மதுவிலக்கு. இந்தச் சுபதினம் ஒன்றிலாவது மாகாண முழுவதும் மதுவிலக்கு அமுலுக்கு வந்தது என்ற பெயர் சென்னை மாகாணத்துக்குக் கிடைக்கட்டும்.

ஏற்கனவே, இது சம்பந்தமாக சென்னையிலும் வெளியூர்களிலும் உள்ள பல சங்கங்களிலிருந்தும் ஸ்தாபனங்களிலிருந்தும் சர்க்காருக்கு வேண்டுகோள்கள் அனுப்பப்பட்டுள்ளன. ஆகவே, சர்க்கார் இதைக் கவனிப்பார்கள் என்று கருதுகிறோம்.

## சுதந்திர மலர்

நேயர்களுக்கு ஒரு சந்தோஷமான செய்தியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அடுத்த "கல்கி" இதழ் சுதந்திர மலராக அதிகப் பக்கங்களுடனும் படங்களுடனும் வெளிவரும். விலை அணா எட்டாக இருக்கும். இதழ் வழக்கமாக வர வேண்டிய தேதி 17-ம் தேதியாகும். ஆனால், சுதந்திர தினம் 15-ம் தேதி. 'கல்கி' இதழுக்காக வேண்டி சுதந்திர தினத்தை இரண்டு நாளைக்குப் பின்னால் வரும்படியாகச் செய்ய முடியாதாகையால், சுதந்திர தினத்துக்காக வேண்டி 'கல்கி' இதழையே இரண்டு நாளைக்கு முன்பு கொண்டு வருவதென்று முடிவு செய்திருக்கிறோம்.

சுதந்திர தினத்தன்றே "கல்கி" எல்லா ஊர்களிலும் கிடைக்கும். அதற்கு அடுத்த இதழ் வழக்கம் போல 24-ம் தேதி யன்று வெளிவரும்.

# கால சக்கரம்!

அன்றும்



இன்றும்





ஆகஸ்டு
14-ந் தேதி
இரவு



பிரிட்டிஷார்



ஆகஸ்டு
15-ந் தேதி
காலை



பிரிட்டிஷார்

# நிகழ்ச்சிச் சித்திரம்

## சுஹ்ரவர்த்திக்கு கல்தா




கிழக்கு வங்காள முஸ்லிம் லீக் சட்ட சபை கட்சித் தலைவர் தேர்தலில் சுஹ்ரவர்த்தி தோல்வியடைந்தார். நாஸிமுதீன் வெற்றி பெற்றார்.

"அமெரிக்கா உடனே உதவி புரியாவிடில் பிரிட்டன் பெரும் பொருளாதார நெருக்கடியால் அவஸ்தைக் குள்ளாகும்"

— பத்திரிகைச் செய்தி

என் பையில் காசு இல்லே

அமெரிக்கா

வற்றாத செல்வம்

பிரிட்டன்

# வெற்றி மேல் வெற்றி!

"யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே."

பாரதநாடு ஒரு முதல்தர வல்லரசாவதற்கு முந்தியே அதன் கீர்த்தியும் செல்வாக்கும் அகில உலகிலும் வியாபித்திருக்கின்றன. அதன் சங்கநாதம் அஷ்ட திக்குகளையும் அதிரச் செய்திருக்கிறது.

வல்லரசுகளின் ஆதிக்கத்துக்குட்பட்ட சர்வ தேச அரங்கத்தைக்கூட ஆட்டி வைக்கும் சக்தி இந்தியாவுக்கு ஏற்பட்டிருப்பது மட்டற்ற மகிழ்ச்சிக்குரிய விஷயம் மாத்திரமல்ல; உலகத்தின் அமைதிக்கும் க்ஷேமத்துக்கும்கூட இன்றியமையாததாகும்.

இந்தோனேஷ்யாவின் நடந்து வரும் படுகொலைகளைத் தடுப்பதற்காக இந்தியா எடுத்துக் கொண்ட முயற்சி வீண் போகவில்லை.

ஆரம்பத்திலேயே பிரிட்டனைப் போன்ற வல்லரசுகள் அபிசீனியா யுத்தத்தைத் தடுத்திருந்தால், — சீன-ஜப்பான் யுத்தத்தைத் தடுத்திருந்தால், இரண்டாவது உலக மகா யுத்தமே ஏற்படாமல் செய்திருக்கலாம். ஆனால், அவற்றைத் தடுப்பதால் தங்களுக்கு நேரடியான லாபம் எதுவுமில்லையென்பதற்காக பிரிட்டன் முதலிய நாடுகள் அவ்விஷயமாக வாசா கைங்கரியத்துடன் நின்றுவிட்டன. கடைசியில் அந்த வினை பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையே சுட்டுவிட்டது.

• • •

அன்று அபிசீனியர்களை இத்தாலியர்கள் படுகொலை செய்ததற்கும், இன்று இந்தோனேஷ்யர்களை டச்சுக்காரர்கள் படுகொலை செய்து வருவதற்கும் அதிக வித்தியாசமில்லை.

இந்த அட்டூழியத்தைத் தடுத்து ஐக்கிய நாடுகள் சபையையும், தங்களையும், உலகத்தையும் காப்பாற்ற பிரிட்டனும் அமெரிக்காவும் என்ன செய்யப் போகின்றன என்பதே இப்போது கேள்வியாகும்.

இது போன்ற சம்பவங்களால்தான் உலக யுத்தமே ஏற்படுகிறது என்று ஐக்கிய நாடுகள் சபையில் ருஷ்யப் பிரதிநிதி சுட்டிக் காட்டியிருப்பதை, ஜனநாயக வல்லரசுகள் கவனிக்க வேண்டியது அத்தியாவசியமாகும்.

அர்த்தமற்ற சர்வதேசச் சட்ட நுணுக்கங்களைக் கூறி இந்தோனேஷ்யப் பிரச்னையை மழுப்பிவிட பிரிட்டனும் அமெரிக்காவும் முயற்சித்தன. ஆனால் இந்தியா, ஆஸ்திரேலியா, ருஷ்யா முதலிய நாடுகள் உறுதியாக நின்றதால், மேற்படி சூழ்ச்சி பலிக்கவில்லை.

இந்தோனேஷ்யாவில் நடந்து வரும் யுத்தத்தை நிறுத்தும்படி ஐ. நா. சபை உத்தரவிட்ட பின்னரும்கூட, டச்சு வெடி விமானங்கள் இந்தோனேஷ்யக் கிராமங்களை இரக்கமின்றித் தாக்கி யிருக்கின்றன.

• • •

இந்தோனேஷ்யாவில் யுத்தத்தை நிறுத்தும்படி கட்டளையிட்டுள்ள அச்சபை, டச்சுக்காரர்கள் தற்போது கைப்பற்றியுள்ள பிரதேசங்களை விட்டுவிட்டு, இந்த யுத்தம் ஆரம்பமாவதற்கு முன் அவர்கள் இருந்த எல்லைக்கு வந்துவிட வேண்டும் என்றும் கட்டளை பிறப்பிக்காதது வெட்கக்கேடான ஒரு விஷயமாகும்.

டச்சுக்காரர்கள் யுத்தத்தை ஆரம்பித்தது அக்கிரமம் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க, அக்கிரம யுத்தம் காரணமாக அவர்கள் கைப்பற்றியுள்ள இடங்களையும் விட்டுவிட்டுப் பழைய எல்லைக்கு வந்து விடுவதுதான் நேர்மையாகும்.

அமெரிக்காவில் நூறு யுத்த தளவாடத் தொழிற்சாலைகள் வெகு மும்முரமாக வேலை செய்து வருகின்றனவென்றும், அணுகுண்டுகள் குவியல் குவியலாக உற்பத்தியாகி வருகின்றனவென்றும் வாரந்தோறும் ருஷ்யாவை மிரட்டி வரும் அமெரிக்கா, கண்முன் அக்கிரமம் செய்து வரும் டச்சு சர்க்காரைக் கண்டிக்காததுடன், அவர்களின் குற்றத்தை மறைக்கவும் முற்பட்டு வருவது டச்சு சர்க்காரின் நடவடிக்கையைவிட மோசமானதாகும்.

ஏனெனில், இன்று டச்சுக்காரர்கள் இவ்வளவு தூரம் அக்கிரமம் செய்து வருவதற்கு முக்கிய காரணமாக இருப்பது பிரிட்டனும் அமெரிக்காவுந்தான்.

• • •

1941 டிசம்பரில் ஜப்பான் யுத்தம் ஆரம்பமான உடனேயே கிழக்காசியாவிலிருந்து பிரிட்டிஷாரைப் போல் டச்சுக்காரர்களும் ஓட்டம் பிடித்தார்கள். அவ்வமயம் பிரிட்டிஷாருக்காவது ஓடி ஒண்ட இடமிருந்தது. டச்சுக்காரர்களுக்கோ அதுகூட இல்லை. அவர்கள் சொந்த நாட்டையும், காலனிகளையும் இழந்து பிற நாடுகளில் அடைக்கலம் புக நேர்ந்தது.

1945-ம் வருஷம் யுத்தம் நின்ற பின்னர்கூட பல மாதங்கள் வரையில் டச்சுக்காரர்கள் இந்தோனேஷியாவின் பக்கமே தலைகாட்டவில்லை. அவ்வளவு பயம்!

இருந்தாலும், டச்சுக்காரர்களின் கைங்கரியத்தை பிரிட்டிஷார் செய்து முடித்து விட்டார்கள்! அதாவது, இந்தோனேஷியாவைத் தாங்கள் ஆக்கிரமித்துக் கொண்டு அதை டச்சுக்காரரிடம் பத்திரமாக ஒப்புவிக்க வேண்டியது தங்கள் கடமையென்று பிரிட்டிஷார் கூறி, அதைக் காரியத்திலும் நிறைவேற்றிவிட்டார்கள்.

அப்போது இந்தோனேஷியர்கள் ஸ்தாபித்துக் கொண்டிருந்த குடியரசையும் பிரிட்டிஷாரோ, அமெரிக்கர்களோ லட்சியம் செய்யவில்லை.

அவ்வமயம் இந்தோனேஷியர்களின் சுதந்திரத்தை அபகரிக்கவும், அவர்களின் இரத்தத்தைச் சிந்தவும் இந்தியத் துருப்புகளைக்கூட பிரிட்டன் உபயோகித்த விபரீதம் உலகம் அறிந்ததே.

அப்படியெல்லாம் சிரமப்பட்டு டச்சு ஏகாதிபத்தியத்துக்குப் புத்துயிர் அளித்த பிரிட்டனும் அமெரிக்காவும், இந்தோனேஷியப் பிரச்னை சம்பந்தமாக ஐக்கிய நாடுகள் சபையில் வேட்டைக் கேடாக நடந்து கொண்டிருப்பதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

அவ் விஷயமாக உடனே உற்ற நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டிய அமெரிக்கா, அச் சந்தர்ப்பத்தை நழுவ விட்டதுடன், ஐ. நா. சபையின் கௌரவத்தைக் காப்பாற்றும் பொறுப்பை இந்தியாவும் ஆஸ்திரேலியாவும் ஏற்றுக் கொள்ளும்படி விட்டது இரண்டு உண்மைகளைத் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கின்றன.

1. உலகிலுள்ள ஒவ்வொரு தேச ஜனங்களுக்கும் அதனதன் அரசியலை நிர்ணயித்துக் கொள்ளும் உரிமை உண்டென்று பறை சாற்றும் சர்வ தேசப் பிரகடனத்தை நிறைவேற்ற வேண்டும் என்ற அந்தரங்க சுத்தி அமெரிக்காவிடம் சூன்யமாக இருக்கிறது.

2. உலகப் பிரச்னைகளை நேர்மையுடன் தீர்க்கும் ஆற்றல் சுதந்திர இந்தியாவுக்கு உண்டு என்பதும் வெளியாகியிருக்கிறது.

• • •

அணுகுண்டு பலமும் அபரிமிதமான பொக்கிஷ பலமும் வாய்ந்த அமெரிக்காகூட,— ஐரோப்பிய நாடுகளைத் தன் இஷ்டப்படி ஆட்டிவைத்து வரும் அமெரிக்காகூட, இந்தியாவின் ஆத்ம பலத்துக்கு விரோதமாக இந்தோனேஷியப் பிரச்னையை மழுப்ப முடியவில்லை!

இந்தோனேஷியர்களுக்கும் டச்சுக்காரர்களுக்கும் நடந்து வரும் யுத்தத்தை, இரு நாடுகளுக்குள் நடக்கும் யுத்தமென்று சொல்ல முடியாது என்று பிரிட்டிஷ் பிரதிநிதி ஐக்கிய நாடுகள் பாதுகாப்புச் சபையில் பேசியிருக்கிறார்.

அதாவது, ''கலகக்காரர்'' களான இந்தோனேஷியர்களை அடக்குவதற்காகத் தாங்கள் போலீஸ் நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருப்பதாய் டச்சுக்காரர்கள் பசப்புவதைப் பிரிட்டிஷ் சர்க்கார் மறைமுகமாக ஒப்புக் கொள்ளுகிறார்கள் என்றாகிறது!

இந்தோனேஷியர்களை ஜாவா சுதேசிகளென்றும், பயங்கர இயக்கத்தைச் சேர்ந்தவர்களென்றும் நெதர்லண்ட்ஸ் ன்தாலீகர் மேற்படி சபையில் வர்ணித்தார். அவரது பிரசங்கமானது, பல வருஷங்களுக்கு முன் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகள் இந்தியர்களைப் பற்றி நிகழ்த்திய பிரசங்கங்கள் போன்றது என்று இந்தியா பிரதிநிதி ஸ்ரீ ஸென் குறிப்பிட்டிருப்பது முற்றிலும் சரியாகும்.

ஆனால், ஆசியாவெங்கும் ஜனங்களிடையே மகத்தான தேசிய உணர்ச்சி பொங்கிக் கொண்டிருக்கும் இக் காலத்தில், பிரிட்டிஷார் கைவிட்

டுள்ள துருப்பிடித்துப் போன அந்தப் பழைய பல்லவியை டச்சுக்காரர்கள் கையாளுவது வடிகட்டிய அசட்டுத்தனமே யாகும்.

• • •

இந்தோனேஷ்யாவில் டச்சுக்காரர்கள் ஆரம்பித்த கோர யுத்தம் ஆசிய நாடுகளுக்கே விடுக்கப்பட்ட ஒரு சவால் என்பதில் சந்தேகமில்லை. அந்த சவாலை ஆசிய நாடுகளின் சார்பில் இந்தியா ஏற்றுக்கொண்டு, தன் கடமையைச் செய்து விட்டது.

டச்சு ஏகாதிபத்தியத்தின் செய்கையை இந்தியாவின் முடிசூடா மன்னனான பண்டித ஜவாஹர்லால் நேரு ஆணித்தரமாகக் கண்டித்ததுடன், டச்சு விமானங்களும் இந்தியாவின் வழியாகச் செல்லக்கூடாது என்று உடனே தடுத்து விட்டார்.

அதாவது, இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை களங்கமற்றது என்பது இப்போது உலகமறிய நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இழந்த சுதந்திரத்தைப் பெறுவதற்காக எவ்வளவோ பாடுபட்ட இந்தியா, ஆசியாவிலுள்ள ஏழ்மையான மற்றொரு நாட்டின் சுதந்திரம் பறிபோவதைக் கண்டு எவ்வாறு பதறாமல் இருக்க முடியும்?

இவ்விதமே ஒவ்வொரு ஐரோப்பிய நாடும், முக்கியமாக அமெரிக்காவும் பிரிட்டனும் தங்கள் கடமையைச் செய்தால்தான் உலகில் அமைதியை நிலை நிறுத்த முடியும்.

ஆனால், டச்சு சர்க்காரும் இந்தோனேஷ்யாவும் போரை நிறுத்த வேண்டும் என்ற தீர்மானம் பாதுகாப்புச் சபையில் வோட்டுக்கு விடப்பட்டபோது பிரிட்டன், பிரான்ஸ், பெல்ஜியம் முதலிய நாடுகள் வோட்டுக் கொடுக்காமல் ஒதுங்கி நின்றதிலிருந்து, வல்லரசுகளின் விபரீதப் போக்கை அறிந்து கொள்ளலாம்.

இந்தோனேஷ்யாவும் நெதர்லண்ட்ஸும் தங்களுடைய தகராறுகளை மத்தியஸ்தத்துக்கு விட்டோ, அல்லது வேறு அமைதியான வழிகளிலோ தீர்த்துக் கொள்ள வேண்டுமென்ற விஷயம் வோட்டுக்கு விடப்பட்ட போதும், மேலே குறிப்பிட்ட மூன்று நாடுகளும் வோட்டுக் கொடுக்காமல் ஒதுங்கி நின்றிருக்கின்றன.

பெல்ஜியம் போன்ற சிறிய நாடுகளைக் கண்டிப்பதால் பலனில்லை. வல்லரசுகளின் தயவை நாடும் அந்தகைய தேசங்கள், நியாயமாயினும் அநியாயமாயினும், வல்லரசுகளின் பக்கமே சேரும்.

ஆனால், இதில் வேடிக்கையான ஒரு விஷயம் என்னவெனில், ஐ. நா. சபையில் நியாயமாகவும் நேர்மையுடனும் நடந்து கொள்ளும் ருஷ்யா உலகில் அமைதியைக் குலைக்க சதி செய்து வருவதாக அமெரிக்கா முதலிய வல்லரசுகள் பிரசாரம் செய்து வருவதுதான்.

• • •

முன்னர், தென்னாப்பிரிக்காவைக் கண்டித்து, மேற்படி சபையில் நிறைவேறிய தீர்மானத்தை ஜெனரல் ஸ்மட்ஸ் குப்பைக் கூடையில் வீசியெறிந்து விட்டார். அவர் ஜவாஹர்லால்ஜிக்கு எழுதியுள்ள கடிதத்தில் "ஐ. நா. சபையின் தீர்மானத்தை நாங்கள் லட்சியம் செய்யப் போவதில்லை" என்று பட்டவர்த்தனமாகக் கூறியிருப்பதாய்த் தெரிகிறது. எனவே, தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களை இழிவு படுத்தி, அவர்களுடைய உரிமைகளைப் பறிக்கும் அக்கிரமங்கள் தொடர்ந்து நடைபெற்றே வருகின்றன.

தென்னாப்பிரிக்கா இந்தியர் பிரச்னை ஐ. நா. சபையில் விவாதத்துக்கு வந்தபோது, அமெரிக்காவும் பிரிட்டனும் இந்தியாவுக்கு விரோதமாக இருந்தன. அப்படியிருந்தும்கூட, இந்தியாவின் சார்பில் பண்டிட் விஜயலக்ஷ்மி விடுத்த உருக்கமான வேண்டுகோள் பிரதிநிதிகளின் கல்மனதையும் கரைத்து விட்டது.

எனவே, சுயநலவாதிகளான வல்லரசுகள் நிறைந்த அச் சபையில் அப்போது இந்தியாவின் ஆத்ம பலமே வெற்றி பெற்றது. இந்தோனேஷ்யப் பிரச்னையை யொட்டியும் இன்று இந்தியாவின் ஆத்ம பலமே வெற்றி பெற்றிருக்கிறது. இந்தியா சுதந்திரம் அடைந்திருப்பதற்குக் காரணம் இந்தியர்களின் இராணுவ பலமல்ல, ஆத்ம பலமேயாகும்.

இவ்வாறாக, நம் பாரதநாடு சர்வதேச அரங்கத்தில் வெற்றிமேல் வெற்றி பெற்று வருவது, எதிர்காலத்தில் இந்தியா நீதி நெறியுள்ள மகத்தான ஒரு வல்லரசாகத் திகழும் என்பதற்கான நல்ல அறிகுறி அல்லவா?

# இரண்டு கவர்னர்கள்

வாழ்க பாரதியார்! வாழ்க அவர்
...ளி வாக்கு!

...தேசம் அன்னிய அதிகார வர்க்கத்துக்கு
...டிமைப்பட்டு நாலா பக்கமும் அந்தகாரம்
...ழ்ந்திருந்த காலத்தில் நம் கவியரசர்
...ரதியார் பூரண சுதந்திரக் கனவு கண்
...ர்! "ஆனந்த சுதந்திரம் அடைந்து
...ட்டோம்!' என்றார். "இந்தப் பூமியில்
...ர்க்கும் அடிமை செய்யோம்!" என்றார்.
...இந்த ஜன்மத்திலே விடுதலை உண்டு!"
...று சொன்னதோடு திருப்தி யடைய
...லை "விடுதலை உண்டு! நிலை உண்டு!"
...று அழுத்தமாயும் திருத்தமாயும்
...றினார்.

அந்தகைய தீர்க்கதரிசியின் ஞாபகார்த்த
...ண்டபத் திறப்பு விழா சுதந்திர இந்தியா
...லே நடக்க வேண்டும் என்று ஏற்பட்
...ருக்கிறது. இரண்டு பெரிய இந்திய
...காணங்களின் இரண்டு சுதந்திர கவர்
...ர்கள் வந்து மேற்படி திறப்பு விழாவை
...த்தவேண்டு மென்றும் ஏற்பட் டிருக்
...றது. "பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள்
...ய்வதும் பாரினிற் பெண்கள் நடத்த
...தோம்!" என்ற பாரதியார் மணி வாக்கு
...பூரணமாக நிறைவேறும் வண்ணம் கவி
...ஞி சரோஜினி "ஹெர் எக்ஸலென்ஸி
...ர்னர்" ஆகி உத்தியோகம் பார்க்க
...ம்பாடு, பாரதியார் மணி மண்டபத்தின்
...றப்பு விழா எட்டயபுரத்தில் நடைபெற
...ண்டு மென்று ஏற்பட் டிருக்கிறது.

• • •

பாரதி மண்டபத் திறப்பு விழாவுக்காக
...ம் அழைத்திருந்த ராஜாஜி கவியரசி
...ருவருக்கு கவர்னர் உத்தியோகம் ஆன
...தைச் செய்தியை யெவர்கள் பத்திரிகை
...யிலே படித்து மகிழ்ந்து குதூகலித்
...ருப்பார்கள்.

இது காரணமாகச் சில பத்திரிகைகளில்
...வளியான தவறான செய்தியைக் கண்டு
...ல நண்பர்கள் ஒருநாள் — இருபத்து
...ன்கு மணி நேரம்—கவலையும் அடைந்
...ருக்கக் கூடும். "ராஜாஜியும் சரோஜினி
...ம் திறப்பு விழாவுக்கு வர மாட்டார்கள்"
...ன்ற செய்தியைத்தான் குறிப்பிடுகிறோம்.

வருவார்கள், கட்டாயம் வருவார்கள், ஆனால் செப்டம்பரில் வருவதற்குப் பதில் அக்டோபரில் வருவார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

ராஜாஜி மேற்கு வங்காளத்துக் கவர்னர் ஆகலாம் என்ற செய்தி வந்த அதே தினத்தில் ராஜாஜியிட மிருந்து திறப்பு விழாத் தேதி சம்பந்தமாகத் தந்தி வந்தது. "பாரதி மண்டபத் திறப்பு விழாவின் தேதியைத் தள்ளிப் போட அவசியம் சேர்ந்திருப்பது பற்றி வருந்துகிறேன். ஸ்ரீமதி சரோஜினி தேவிக்கு லக்னௌவிலும் எனக்குக் கல்கத்தாவிலும் வேலை ஏற்பட்டிருக்கிறது. திறப்பு விழாவை அக்டோபர் இரண்டாவது அல்லது மூன்றாவது வாரத்தில் வைத்துக் கொள்ள வேணுமென்று ஸ்ரீமதி சரோஜினி தேவி கேருகிறார்கள்" என்பது தந்தியின் சாராம்சம். பாரதி மண்டபத் திறப்பு விழாவை ராஜாஜி எவ்வளவு முக்கியமானதென்று கருதுகிறார்கள் என்பதை மேற்படி தந்தியிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

மறுபடியும் யோசனை செய்து திறப்பு விழாவுக்கு அக்டோபர் மீ 12உ 13உ களை ராஜாஜி அங்கீகரித்திருக்கிறார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். கவியரசியும் மேற்படி தேதிகளை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

இவ்விதம் திறப்பு விழாத் தேதியை ஒரு மாதம் தள்ளிப் போடப்பட்டது விழாவை நடத்தும் பொறுப் பேற்றவர்களுக்கும் சௌகரியந்தான் என்பதையும் குறிப்பிட்டு வைக்கிறேன். சாவதானமாக யோசித்துச் சிறந்த முறையில் திறப்பு விழாவுக்குரிய சகல ஏற்பாடுகளையும் செய்ய தற்சமயம் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. ஒத்திப் போட்ட வைபவம் ஒன்றுக்கு மூன்று மடங்கு சிறப்பாக நடக்கும் என்று தமிழன்பர்கள் நிச்சயமாக எதிர்பார்க்கலாம்.

• • •

சென்ற முறை பாரதியார் ஞாபகார்த்த நிதி வசூல் நடத்தியபோது, எந்த இடத்திலும் யாரையும் பார்க்கப் போக

வில்லை. நாடெங்குமுள்ள தமிழன்பர்கள் அவரவர்களே போட்டி யிட்டுக் கொண்டு பணம் அனுப்பினார்கள். சிலர் வசூலித்தும் அனுப்பினார்கள்.

இந்தத் தடவை திறப்பு விழாவுக்குத் தேதி குறிப்பிட்டு விட்டபடியாலும், அதற் குப் பிறகு நிதி வசூலை நீடித்து நடத்த விருப்பமில்லாதபடியாலும் சில முக்கிய மான ஊர்களுக்கு நிதி வசூல் செய்ய நேரில் போகலா மென்று எட்டயபுரம் பாரதி மன்றத்தார் யோசனை சொன் னார்கள். அதை நானும் ஒப்புக் கொண் டேன். பாரதி மன்றத் தலைவர் ஸ்ரீ கந்த சாமி செட்டியாரும் நானும் இராஜபாளை யத்தின் பழம் பெரும் தேச பக்தரான ஸ்ரீ சின்ன வேங்கடராஜா அவர்களும் வசூலுக் குப் புறப்பட்டோம். திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் நண்பர்களான ஸ்ரீ சோமயாஜுலு, ஸ்ரீ மேகநாதன், கோவில் பட்டி ஸ்ரீ சண்முகம் பிள்ளை, தென் காசி டாக்டர் ரங்காச்சாரி ஆகியோர் அங்கங்கே எங்களுடன் சேர்ந்து கொண்டார்கள்.

மேற்படி நிதி வசூல் யாத்திரையில் நாங்கள் அடைந்த அநுபவம் அற்புத அநுபவமாயிருந்தது. சென்ற இடங்களில் எல்லாம் முகமலர்ச்சியுடன் பரிசுப் பரிசென்று பணத்தை எடுத்துக் கொடுத் தார்கள். எண்ணிக் கொடுத்தார்கள்; எண்ணாமலும் கொடுத்தார்கள்.

ஜமீன்தார்கள் தங்களுடைய வருங்கால நிலைமை என்னவோ என்று கவலைப்படக் கூடிய காலம் அல்லவா இது? அப்படிப் பட்ட நிலைமையில் வயதிலும் அநுபவத்தி லும் முதிர்ந்த பெருந்தகையான சேத்தூர் ஜமீன்தார் அவர்கள் பாரதியாரே நேரில் வந்து விட்டதுபோல் எங்களுக்கு வரவேற் பும் விருந்தும் அளித்து, பாரதியார் பாலரா யிருந்தபோது தமது சமஸ்தானத்திலும் சில நாள் வளர்ந்ததைப் பெருமையுடன் எடுத்துச் சொல்லி ரூபாய் ஆயிரத் தொன்று ரொக்கமும் கொடுத்தனுப் பினார்கள்.

ஊத்துமலையின் இளம் பிள்ளை ஜமீன் தார் ஸ்ரீ என். எச். எம் பாண்டியன் அவர் களும் பாரதியார் விஷயத்தில் அபார உற்சாகத்தைக் காட்டினார்கள்.

தேச பக்திக்கும் வேட்டை நாய்க்கும் பெயர் போன இராஜபாளையத்தில் நாங்கள் அடைந்ததை ஒரு தனி அநுபவம் என்றே சொல்ல வேண்டும். நிதிக்குழுக்காக நாங்கள் புகுந்த வீடு எதிலும் வேட்டை நாயை காணவில்லை. அன்பாக வரவேற்று உ[பசரித்து] விஷயத்தைச் சொன்ன த[க்]க்ஷணமே வெற்றிலைப் பாக்குத் தட்டி[ல்] பணத்தை வைத்து இரண்டு கையாலு[ம்] எடுத்துக் கொடுத்தார்கள். இராஜபாளை[ய] நகரில் முதல் நன்கொடை நமது மா[நில] மந்திரி ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜ[ா] அவர்களுடையது என்பதை நன்றியோடு மகிழ்ச்சியோடும் குறிப்பிடுகிறேன்.

இன்னும் சில ரஸமான விவரங்க[ள்] சொல்வதற்கு இருக்கின்றன. அவற்[றை] இன்னொரு இதழுக்கு வைத்து கொள்ளலாம்.

## பாரதி மண்டப நிதி

| | | |
|---|---|---|
| சேத்தூர் ஜமீன்தார் ஸ்ரீ வி. டி. எஸ். சேவுகபாண்டியத் தேவர் அவர்கள் | 1001 | 0 |
| ஸ்ரீ கே. ராமசாமி தாஸ், ஸ்ரீ கோபாலன் மோட்டார் சர்வீஸ், கோவில்பட்டி | 501 | 0 |
| ஸ்ரீ எஸ். அனந்தராமகிருஷ்ணன், மானேஜிங் டைரக்டர், சிம்ஸன் கம்பெனி, சென்னை | 500 | 0 |
| ஸ்ரீ என். எம். ஆர். வெங்கட கிருஷ்ணய்யர், மதுரை | 500 | 0 |
| ஸ்ரீ என். எச். எம். பாண்டியன், ஊத்துமலை ஜமீன்தார், வீர கேரளம்புதூர் | 250 | 0 |
| ஸ்ரீ ஐ. கே. சுப்ரமணிய பிள்ளை, மிட்டாதார், இலஞ்சி | 101 | 0 |
| ஸ்ரீ பி. கே. குப்புசாமிராஜா, மர வியாபாரம், இராஜபாளையம் | 101 | 0 |
| ஸ்ரீ கேவி. அழ. அழ. ராம. அழ கப்பச் செட்டியார், ஜானகிராம் மில்ஸ், இராஜபாளையம் | 101 | 0 |
| ஸ்ரீ கே. மனத்துணைநாத தேசி கர் எம். எல். ஸி., வலிவலம் | 101 | 0 |
| ஸ்ரீ கே. ஆறுமுகப் பெருமாள் மூப்பனார். சண்முக விலாஸ் தியேட்டர் லிமிடெட், இராஜ பாளையம் | 100 | 0 |
| ஸ்ரீ என். ஆர். கிருஷ்ணமராஜா, இராஜபாளையம் | 100 | 0 |
| ஸ்ரீ என். ஏ. பி. அழகிரி ராஜா, இராஜபாளையம் | 100 | 0 |
| ஸ்ரீ ஏ. கே. டி. பலராம ராஜா, தலைவர், டவுன் காங்கிரஸ் கமிட்டி, இராஜபாளையம் | 100 | 0 |
| ஸ்ரீ டி. ஏ. கே. மணி அழக ராஜா, இராஜபாளையம் | 100 | 0 |
| ஸ்ரீ டி. கே. ராஜா, இராஜ பாளையம் | 100 | 0 |
| ஸ்ரீ ஆர். சீனிவாசய்யர் பி.ஏ. பி.எல்., திருச்சிராப்பள்ளி | 100 | 0 |

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| ஸ்ரீ எஸ். டி. எஸ். மரியதாஸ் பூபாலராயர், செய்துங்கநல்லூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளை, இராம முனசீப், செய்துங்கநல்லூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கந்தசுப்பனூர், ஜவுளிக் கடை, செய்துங்கநல்லூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ சங்கரன், ஜவுளிக்கடை, செய்துங்கநல்லூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பெரும்படையான் பிள்ளை, வக்கீல், தூத்துக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கந்தக்கோனூர், விட்டலபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ சுப்பையாத் தேவர், விட்டலபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ராமையா, மளிகை, விட்டலபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ முத்துசிவன் பிள்ளை, விட்டலபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஸ்ரீநிவாஸய்யர், விட்டலபுரம் | 5 | 0 | 0 |
| (பரமக்குடி ஸ்ரீ ஜி. கோவிந்தன் [illegible] வரவு ரூ 105-க்கு விபரம்) | | | |
| ஸ்ரீ டி. சீனிவாஸய்யங்கார், வக்கீல், பரமக்குடி | 10 | 0 | 0 |
| ஸ்ரீ சாமவர்மா, பரமக்குடி | 10 | 0 | 0 |
| ஸ்ரீ என். சுப்பய்யா பிள்ளை, [illegible] ஏஜெண்ட், பரமக்குடி | 10 | 0 | 0 |
| ஸ்ரீ சுப்ரமணிய விலாஸ் காபி ஹோட்டல், பரமக்குடி | 10 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ராஜகோபால், பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வி. லெட்சுமணப் பிள்ளை, பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ.வி. அழகு சொக்கு பிள்ளை, பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஜனாப் பி.ஏ.இ. முகமது உசேன், பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வி. ஆர்எம். ஜெ. ராமநாதன், எமனேஸ்வரம் | 5 | 0 | 0 |
| அகில பாரத சர்க்கா சங்க ஊழியர்கள், பரமக்குடி | 5 | 0 | 0 |
| கோவாபரேடிவ் ஸ்டோர் சிப்பந்திகள், பரமக்குடி | 5 | 0 | 0 |
| சௌத் மெட்ராஸ் எலெக்ட்ரிக் [illegible]ப்பந்திகள், பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வி. சுந்தரம் வாத்தியார், பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ டாக்டர் செல்லையா பிள்ளை, பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பி. சிவராமன், [illegible] மானேஜர், பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ சங்கரநாராயணன், பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ செல்லமய்யர், பரமக்குடி | 5 | 0 | 0 |
| ஆக மொத்தம் ரூ. | 5587 | 3 | 0 |
| ஏற்கனவே வசூல் ரூ. | 8300 | 0 | 3 |
| ஆக மொத்தம் ரூ. | 13,887 | 3 | 3 |

# தீப்பெட்டி

கி.ரா. கோபாலன்

அவன் சுபாவமே ஒருமாதிரி; வலுவில் சென்று பிறரோடு பேசுவதில்லை. பிறர் நெருங்கிப் பழக விரும்பினாலும் பிடி கொடுப்பதில்லை. அவன் வருவதும் போவதும் தான் தெரியும். அவன் குரலைக் கேட்பதே அபூர்வம். அவன் எங்கு உத்தியோகத்தி லிருக்கிறான், என்ன சம்பாத்தியம் என்பதை யெல்லாம் பிறர் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டாலும் பிறரைப் பற்றி அவன் தெரிந்துகொள்ள ஆசைப்பட்டதே கிடையாது. அவன் ஏதோ ஒரு கடையில் குமாஸ்தா. வேலை நேரம் போக மற்ற நேரங்களில் படிப்பதும் எழுதுவதும்தான் அவன் பொழுது போக்கு.

அந்த வீட்டில் வாசற் பக்கத்து அறைக்கு அவன் குடி வந்து வருஷம் மூன்றாகி விட்டன; பக்கத்து வீட்டில் எதிர் வீட்டில் யார் இருக்கிறார்கள் என்று அவனுக்குத் தெரியாது. தான் இருக்கும் வீட்டு மாடியில் ஒரு வக்கீல் குமாஸ்தாவும், இருபது வயதிற்கு மேலாகியும் விவாகமாகாத அவருடைய பெண்ணும் குடியிருக்கிறார்கள் என்பதுதான் தெய்வாதீனமாக அவனுக்குத் தெரியும். அதிகமாகச் சொல்லப் போனால் வாஞ்சிநாதய்யர் என்ற அந்த வக்கீல் குமாஸ்தாவின் பெயரும், மங்களம் என்ற அப்பெண்ணின் பெயரும் அடிக்கடி பிறர் கூப்பிடும் பழக்கத்தி லிருந்து தெரிந்து கொண்டிருந்தான். இதைத் தவிர அவர்கள் முகத்தைக்கூட அவன் சரியாக நிமிர்ந்து பார்த்துத் தெரிந்து கொண்டவன் அல்ல.

அன்று ஞாயிற்றுக்கிழமை; ஓய்வு நாள். மத்தியான வேளையில் அவன் தன் அறையில் உட்கார்ந்து ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தபொழுது, "ஸார்!" என்ற குரல் கேட்டு நிமிர்ந்து பார்த்தான். வக்கீல் குமாஸ்தா வாஞ்சிநாதய்யர் அவன் எதிரில் நின்று கொண்டிருந்தார். என்றுமில்லாமல் அன்று அவர் தன்னுடைய அறையை நாடி வந்த ஆச்சரியத்தை அவன் சமாளித்துக் கொள்வதற்கு முன்னால் அவரே அசட்டுச் சிரிப்பும் கூச்சமும் நிறைந்த முக கெளிவோடு, "உங்க கிட்டே தீப்பெட்டி இருந்தா கொடுக்கிறீர்களா? கடையிலே வரவர இந்தத் தீப் பெட்டி கிடைக்கிறது அபூர்வமாய்ப் போயிடுத்து, ஸார்!" என்றார்.

அவன் சட்டென்று எழுந்து அலமாரியிலிருந்து தீப்பெட்டியை எடுத்து அவரிடம் கொடுத்துவிட்டு உட்கார்ந்து, புத்தகத்தின் ஏடுகளைப் புரட்ட ஆரம்பித்தான். வாஞ்சிநாதய்யர் தீப்பெட்டியை வாங்கிக் கொண்டு, "என்ன காலம், ஸார்! என் ஆயுசிலே இந்தமாதிரி ஒரு சாதாரண சாமானுக்குப் பஞ்சம் ஏற்பட்டு நான் பார்த்ததில்லை" என்று காலத்தை நொந்து கொண்டே போனார்.

அன்று சாயந்திரம் விளக்கு வைக்கும் நேரம். அவன் வெளியே உலாவிவிட்டு வந்து, அறைக் கதவைத் திறந்து விளக்கேற்ற நினைத்தபொழுதுதான் மத்தியானம் வாஞ்சிநாதய்யரிடம் கொடுத்த நெருப்புப் பெட்டி திரும்பி வாராதது ஞாபகத்திற்கு வந்தது. அறையிலோ இருள் கவிந்திருந்தது. விளக்கேற்றியாக வேண்டுமே, என்ன செய்வது? 'மாடிக்குச் சென்று கேட்கலாமா?' என்று எழுந்த எண்ணம் சட்டென்று மாறியது. 'அற்ப விஷயம்; தீப்பெட்டி — இதைப் போய்க் கேட்கலாவது!' என்று எண்ணியவனாய்ச் சட்டைப் பையில் சில்லறை இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டு 'விறுவிறு' வென்று கடை வீதிப் பக்கம் நடந்தான்.

ஒன்பது, பத்து கடைகளாகி விட்டன. ஒவ்வொரு கடையாக நின்று கேட்பது அவனுக்கே வெட்கமாக இருந்தது. ஒரு கடையிலாவது தீப்பெட்டி இருக்கிறது என்று சொல்ல வேண்டுமே? உள்ளபடியில் தீப்பெட்டிப் பஞ்சம் ஏற்பட்டிருப்பதை அவன் அப்பொழுதுதான் சரியாக உணர்ந்தான். என்ன செய்வது? வாஞ்சிநாதய்யரிடம் கொடுத்த தீப்பெட்டியைத் திருமபக் கேட்டு வாங்கித்தானாக வேண்டும்.

'மடமட'வென்று மாடிப்படி ஏறி வந்து விட்டான். மாடித் தாழ்வாரத்திற்கு வந்த உடனேதான் அவனை யறியாமல் சிறிது தயக்க மேற்பட்டது. தடுமாற்றத்தைச் சமாளித்துக் கொண்டு அடக்கமான குரலில், "ஸார்!" என்றான். பதிலில்லை; 'அவர் இல்லையோ?' — சங்கடத்தோடு சிறிது நேரம் யோசனை செய்துவிட்டுச் சற்று உரத்த குரலிலேயே, "ஸார்!" என்று கூப்பிட்டான். அங்கிருந்த சிறிய அறையிலிருந்து 'யார்?' என்ற குரல் பளிச்சென்று கேட்டது. அது வாஞ்சிநாதய்யருடைய

குரல் அல்ல; அவருடைய பெண் மங்களத் தின் குரல்தான் என்பதை அவன் எளிதில் உணர்ந்து கொண்டான். இருந்தாலும் தைரியத்தை விடாமல், "ஸார் இருக் காரா?" என்று கேட்டான்.

"யார் அது? ஏன்?" என்று ஒன்றன் பின் ஒன்றாகக் கேள்விகளைக் கேட் டுக் கொண்டே வந்த மங்களம், வெளித் தாழ்வாரத்தில் அவன் நிற்பதைக் கண்ட தும் வெட்கமடைந்து குன்றிப் போய் நின்று விட்டாள்.

"இல்லை......மத்தியானம் நீப்பெட்டி வாங்கிக் கொண்டு வந்தார்......" என்று அவனும் இழுத்துப் பறித்துக் கொண்டு சொல்லி முடித்தான். அவளும் தாமதம் செய்யாமல் நீப்பெட்டியை எடுத்துக் கொண்டுவந்து வாசற்படிக்குச் சமீபமாக வைத்தாள். அவன் அதை எடுத்துக் கொண்டு மேலே தன் அறைக்கு வந்த பொழுதுதான் உடம்பெல்லாம் வியர்த்து, சட்டை பிழிந்தெடுக்கக் கூடிய ஈரமா யிருந்ததை உணர்ந்தான்.

★

அன்று இரவு. மணி ஒன்பதிலிருந்து பத்திற்குள் இருக்கும். அவன் வழக்கம் போல் புத்தகப் படிப்பில் கவனமாயிருந் தான். "ஸார்!" என்று கூப்பிட்டுக் கொண்டே அறையில் நுழைந்தார் வாஞ்சிநாதய்யர். அவன் வாயைத் திறந்து அவரை 'வாருங்கள்' என்று கூப்பிடா விட்டாலும் அவனுடைய முக விலாசம் அவரை வரவேற்கும் தோரணையில் இருந்தது.

அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து அவர் தொடர்ந்து பேச ஆரம்பித்தார். "என்னை மன்னிக்கணும். செருப்புப் பெட்டியைக் கையோடே உங்கக்கிட்டே திருப்பிக் கொடுக்க மறந்து போயிட்டேன். உங்க ளுக்கு ரொம்ப சிரமம் ஏற்பட்டிருக்கும்" என்றார்.

"அதனாலே என்ன? ஒன்றும் பாதக மில்லை......"

"பாதகமில்லைன்னு சட்டென்று சொல்லி விட முடியுமா? பிரமாதமில்லை; செருப்புப் பெட்டிதான். இருந்தாலும் அகப்படாத காலத்திலே அற்ப சாமானு யிருந்தாலும் சமயத்திலே கைக் குதவாவிட்டால் பிரமாத மாயிடும்.........அதிருக்கட்டும், உங்க பேரு விசுவநாதன்தானே? நீங்க தஞ்சாவூர் ஜில்லா பேர்வழி மாதிரி......"

"ஆமாம்; திருப்பழனத்துக்கிட்டே மேகராஜபுரம்னு......"

வாஞ்சிநாதய்யர் ஏதோ ஒரு உண்மை யைக் கண்டு பிடித்துவிட்ட பூரிப்போடு, "சரிதான்; நான் நினைச்சபடியேதான் ஆயிடுத்து. ரொம்ப நெருக்கிறுப்பிலே வந்துட்டமே! உங்க ஊருக்கு மேற்கே ஐந்தாறு மைல்லே ஆடுதுறை பெருமாள் கோவில் இருக்கு பாருங்கோ, அதுதான் என் சொந்த ஊர். எல்லாம் வயத்துப் பிழைப்பு நிமித்தம் இந்தப் பட்டணம் வந்து அல்லாட வேண்டியிருக்கு......அது சரி நீங்க வடமாதானே?"

"ஆமாம்."

"வேறே எப்படி இருக்க முடியும்? அந்த தேஜஸைப் பார்த்தாலே தெரியறதே! உங்க தாயார் தகப்பனாரெல்லாம் ஊரிலேயே..."

"இல்லை; அவாளெல்லாம் இறந்து போயிட்டா!"

"வேறே சொந்த மனுஷ்யாள்......?"

"நிறைய இருக்கா! அவாளோடெல்லாம் நான் அவ்வளவா நெருங்கிப் பழகற தில்லை."

"ஆமாம், ஸார்! ஸ்நேகிதர் செய்யற நல்லது சொந்த மனுஷ்யாள் செய்ய மாட்டா! பாவம் நீங்க இப்படியே ஹோட் டல்லே சாப்பிட்டுக் கொண்டு எத்தனை நாள் தள்ள முடியும்?"

"என்ன செய்யறது!"

"அப்படிச் சொல்லாதேங்கோ; எப் பொழுதும் ஒரு குடியும் குடித்தனமுமா இருக்கிறதைப் போல நல்லது கிடையாது. உங்களுக்கென்ன ஸார், கல்யாணம்னு பெண்ணா இல்லாமே போயிடப் போறது?"

"பெண்களுக்குக் குறைவில்லைதான். ஒரு குடும்பம்னு சமாளிக்க வேண்டாமா?"

"ஏன் சமாளிக்க முடியாது? உங்களுக் கென்ன குறைவு? நீங்க உத்தியோகம் பார்க்கலையா, சம்பாதிக்கலையா?"

"என்ன பெரிய உத்தியோகம்! என்ன பிரமாதமான சம்பாத்தியம்? நாற்பது ரூபாய், அதுவும் இந்தப் பஞ்ச காலத் திலே......"

"நாற்பது ரூபாயாயிருந்தால் என்ன அதுக்குத் தகுந்தாப்பலே குடித்தனம் நடத்தறது. எனக்குத்தான் என்ன சம்பாத்தியம்னு நினைக்கிறேன்? ஒன்று மில்லை. ஒரு மாசம் நூறுக்கு மேலே ஓடும்; இன்னொரு மாசம் இருபதுக்கே

இருக்கும்! என்ன செய்யறது? எங்க மங்களந்தான் எப்படியோ செட்டாகக் குடித்தனத்தை நடத்திண்டு வரா. அவளுக்கு அவ்வளவு சாமர்த்தியமும் புத்திசாலித்தனமும் இல்லாட்டா, என் கௌரவம் குலைந்து போயிருக்கும், ஸார்! அது சரி, உங்க கோத்திரம் என்ன சொல்லுங்கோ?"

"என்?"

"சொல்லுங்கோ, ஒரு நல்ல ஏற்பாடு செய்யறேன்!"

வாஞ்சிநாதய்யர் எதையோ தன் மனதில் உறையேத்திக் கரைக்க நினைக்கிறார் என்பதை அவன் எளிதில் உணர்ந்து கொண்டான். பாவம், ஏழை! வக்கீல் குமாஸ்தா உத்தியோகத்தோடு வரன் தேடிக் கல்யாணம் செய்து வைப்பதிலும் சிறிது சம்பாதிக்கலா மல்லவா என்று அவன் எண்ணியதில் பிசகென்ன?

அவனுக்குக் கல்யாணமென்றாலே கசப்பாயிருந்தது. சம்பளம் நாற்பது ரூபாய். இதில் அறை வாடகை, சாப்பாட்டுச் செலவு, சில்லறைச் செலவுகள் — இவைகளுக்கே போதாமல் அவன் கஷ்டப்படும்போது கல்யாணமென்றால் கசப்பாயில்லாமல் எப்படி இருக்கும்? அவன் ஒருவனே காலங் கடத்துவது சிரமமாயிருக்கும் பொழுது, தன்னுடைய பொறுப்பில் இன்னொரு ஜீவனும் வாழ வேண்டுமென்றால் — அதை அவன் நினைத்துப் பார்க்கக்கூட அஞ்சினான். வாழ்க்கையை இன்னொரு பிணைப்பில்லாமல் தனியாகவே நடத்தி விடலாம் என்ற நம்பிக்கையும் துணிவும் அவனுக்கு இருந்தது. இந்த நம்பிக்கையையும் துணிவையும் கரைக்க வாஞ்சிநாதய்யரால் முடியாது. அதற்கு வேறெதாவது சக்தி இருந்தால்தான் முடியும். அவன் ஏளனம் கலந்த குரலில் அவருக்குப் பதில் சொன்னாலும் அதில் ஓர் அர்த்தமும் பிடிவாதமும் இருந்தன.



"ஸார், நீங்கள் என் வீணாகச் சிரமப்படுகிறீர்கள்? நான் இப்போ கல்யாணம் செய்து கொள்ளும் நிலையிலே இல்லை!"

"நீங்கள் கல்யாணம் செய்து கொள்ளும் நிலையிலிருக்கேளா இல்லையான்னு எனக்குத் தெரியும், ஸார்! காலம்னு வந்தா யாராலே தடுக்க முடியும்? காலம் வரபோது எல்லாம் தானே கூடிவரும். உங்களைக் கஷ்டப்பட வைக்கணுங்கிறது என் அபிப்பிராயமா? நீங்கள் யாரோடும் ஒட்டிப் பழகுகிறதேயில்லை. அது எனக்கு நன்னாத் தெரியும். அப்படி இருக்கச்சே, உங்க அறைக்கு நானே வந்து பேசறதுன்னா ஏதோ காரணமிருக்கத்தானே வேணும்? நீங்கள் முதல்லே கோத்திரத்தைச் சொல்லுங்கோ!" என்றார் வாஞ்சிநாதய்யர்.

கோத்திரத்தைச் சொல்லிவிட்டால் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்ததாகி விடுமா? அவன் ஏதோ சங்கடத்தில் அகப்

பட்டுக் கொண்டவன் போல் சொன்னான், “மைத்திராவாசிய கோத்திரம்!” என்று.

இதைக் கேட்ட வாஞ்சிநாதய்யரின் முகத்தில், பசித் துடிப்பிலிருந்தவன் ஆகாரத்தைக் கண்டது போன்ற பிரகாசம் ஏற்பட்டது. ‘நல்ல வேளை, பொருத்தமாய்ப் போச்சு! மற்றது எப்படி இருந்தாலும் பாதகமில்லை. நானும் நீங்களும் ஒரே கோத்திரமாயிருக்கப் போறமென்னு மனஸிலே பயமிருந்தது. நல்ல வேளையாக அது இல்லை!” என்றார்.

அவனுக்கு இப்பொழுது எல்லாம் தெளிவாக விளங்கிவிட்டது. பாவம், ஏழை மனிதர்! இருபது வயதிற்கு மேலும் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொடுக்காமலிருப்பதென்றால் மனச் சமாதானத்திற்கு வழியுண்டா? தம் அந்தஸ்திற்கேற்ற கடை குமாஸ்தா விசுவநாதன்தான் தம்முடைய பெண்ணிற்குச் சரியான வரன் என்று அவர் மனதிற்குப் பட்டால் அதிலென்ன பிசகு? அவன் சிறிது ஏளனம் கொண்ட சிரிப்புடன் அவர் முகத்தைப் பார்த்தான். மறு நிமிஷமே அந்தப் பரிகாசம் நிறைந்த பார்வையிலேயே ஓர் இரக்கம் தென்பட்டது. “என்னைவிட உங்களுக்குச் சரியான மாப்பிள்ளை கிடைக்கவில்லையா?’ என்றான்.

“உங்களைவிடச் சரியான மாப்பிள்ளை எனக்குக் கிடைக்கிறதும் கஷ்டம்; எங்க மங்களத்தைப் போன்ற சம்சாரம் உங்களுக்குக் கிடைப்பதும் கஷ்டம்!” என்றார் வாஞ்சிநாதய்யர்.

அவன் அலக்ஷியமாகச் சிரித்துக் கொண்டே, “நீங்கள் மாப்பிள்ளை தேடுகிறீர்கள். அதனாலே என்மாதிரி ஒரு சாதாரண ஆசாமி கிடைப்பதுகூட உங்களுக்கு அபூர்வமாயிருக்கு. ஆனால் நான் அவ்வளவு துடிப்பாகக் கல்யாணம் செய்து கொள்ளப் பெண்கள் தேடவில்லை. அப்படியிருந்தால் ஒரு வேளை உங்கள் பெண் எனக்குக் கிடைக்கக்கூடாத அபூர்வமாயிருப்பாளோ என்னவோ!” என்றான்.

“ஸார்! நீங்க ஏதோ உதறினாப்போலே பேசுகிறீர்கள்! இது என்னுடைய நன்மைக்காக இருந்தாலும், உங்க நன்மையையும் கருதித்தான் பிரயாசைப்படறேன்!”

“இதிலே எனக்கென்ன நன்மை? தீமைதான்! சம்சார சாகரத்திலே இறங்கினவா யார் மன விசாரமில்லாது இருக்கா?”

“வாஸ்தவம்; கஷ்டம், சுகம் இரண்டும் இருக்கத்தான் செய்யும். அதையெல்லாம் சமாளிச்சுத்தானாகணும். கிரகஸ்தனாக இருந்தால்தான் உலகத்துக்கு நல்லவனாகப் படும். நான் ஒரு யோசனை சொல்றேன். அதை முழுவதும் காதிலே வாங்கிக் கொண்டு அப்புறம் நீங்கள் சொல்லுங்கோ, நான் கேட்கிறேன்.”

விசுவநாதன் அலுப்புடன், “உங்கள் யோசனைதான் என்ன? சொல்லுங்கள்!” என்றான்.

“சாதாரண விஷயம். இந்த நெருப்புப் பெட்டியை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு நெருப்புப் பெட்டிதான் இருக்கிறது. அது இரண்டு இடங்களுக்கு உபயோகப்படணும்னு என்ன கஷ்டமாயிருக்கு, பாருங்கோ! சிரமம் மாத்திரம் இல்லை; அகப்படாத இந்தப் பஞ்ச காலத்திலே இன்னும் நாலு குச்சி கூடவே செலவழிகிறது. இந்த மாதிரிப் பொருளையெல்லாம் அனாவசியமாய் விரயமாக்கக் கூடாதென்னு அரசாங்கத்திலே எவ்வளவு பிரசாரம் பண்றா? உங்களுக்குத் தெரியாதா, என்ன? இப்போ ஊரிலே குடியிருக்க இடம் அகப்படாமே எவ்வளவு பேர் திண்டாடறா? நீங்களும் எங்கள் குடும்பத்திலே ஒரு மனுஷ்யராகி விட்டால் மாடியிலேயே நீங்கள் சௌகரியமாயிருந்து விடலாம். பன்னிரண்டு ரூபாய் வாடகையும் மிஞ்சும். இடமில்லாமல் தவிக்கிறவாளுக்கு இடம் கொடுத்தாப் போலேயும் இருக்கும்......”

“ஏன், உங்களுக்கு வேண்டியவர் யாராவது இடம் அகப்படாமல் திண்டாடுகிறார்களோ?”

“நீங்கள் என்னைப் பற்றி ரொம்ப தவறாக அபிப்பிராயப்படுகிறீர்கள்!”

“தவறான அபிப்பிராயமோ சரியான அபிப்பிராயமோ, இரண்டுமில்லை உங்கள் பேரில் எனக்கு!”

“பிடிவாதமா எதையாவது நினைத்துக் கொண்டிருக்கிறவாளுக்கு நல்லது கூடக் காதிலே படுகிறதில்லே!”

“நல்லதோ கெடுதலோ, முன்னாலேயே யோசனை செய்து முடிவிற்கு வந்த விஷயத்தைப் பற்றி மறுபடியும் புனராலோசனை செய்வதினால் என்ன பிரயோசனம்?” என்றான் அவன்.

வாஞ்சிநாதய்யருக்கு அவனோடு விவாதம் செய்து சமாளிக்க முடியாதுபோலிருந்தது. அவர் அலுப்புடன், “நீங்கள் விதண்டா வாதம் செய்கிறதிலே சாமர்த்தியசாலியாயிருக்கிறீர்கள். என்னமோ என் மனதிற்கு நல்லதாகப் பட்டதை உங்களுக்குச் சொன்னேன். நான் உங்களை

வற்புறுத்தத் தயாராயில்லை. நீங்களே யோசித்து ஒரு முடிவுக்கு வந்தால் சரி தான்!' என்று சொல்லிக் கொண்டே எழுந்தார்.

“என் கல்யாண விஷயத்தைப் பற்றி நான்தானே யோசித்து ஒரு முடிவுக்கு வரணும்? இப்பொழுது ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். இதற்கு மாறாக ஏதாவது யோசித்து ஒரு முடிவுக்கு வந்தால் முதலில் உங்களைக் கூப்பிட்டுச் சொல்லு கிறேன்!” என்றான் அவன்.

*

மறுநாள் சாயந்திரம் விசுவநாதன் விளக்கை ஏற்றி வைத்துவிட்டு அலமாரியி லுள்ள புத்தகங்களைப் புரட்டிக் கொண் டிருந்தான். அவன் கண்ணுக் கெதிரி லிருந்த சுவரில் ஏதோ நிழல் படவே, சட் டெனத் திரும்பினான். அறை வாசற்படிக் கருகில் மங்களம் நின்று கொண்டிருப்ப தைப் பார்த்ததும் பிரமித்து விட்டான்.

வெட்கமும் நாணமும் வார்த்தைகளில் பின்னலிட மங்களம்தான் முதலில் பேசினாள்.

“கொஞ்சம் நெருப்புப் பெட்டி இருந்தா கொடுங்கோ!”

விசுவநாதன் தாமதமன்னியில் நெருப்புப் பெட்டியை எடுத்துக் கொடுத்தான். அதை வாங்க நீட்டிய அவளுடைய கையும், அதில் அணியப் பெற்றிருந்த மூன்று கண்ணாடி வளையல்களும்தான் அவனுக்குத் தெரியும்.

மங்களம் சென்ற பிறகு அவளுடைய முகத்தைச் சரியாகப் பார்க்காதது என்னவோ அவனுக்குக் குறையாகத்தா னிருந்தது. அவளுடைய அழகிய கைகளை ஒப்பிட்டு அவள் முக அழகைக் கற்பனை செய்து பார்க்க எண்ணினான். நெருப்புப் பெட்டியினால் தனக்கும் வாஞ்சிநாதய்யர் குடும்பத்திற்கும் ஏற்பட்ட தொடர்பு அவ னுக்கு அவ்வளவு முக்கியமானதாகப் படா விட்டாலும், அவன் மனதிற்கு அது ஏதோ ஒரு புது விதமான கிளர்ச்சியைக் கொடுக் கக் கூடியதாய்த்தா னிருந்தது.

இரண்டு இடங்களுக்கு ஒரே தீப் பெட்டியை வைத்துக் கொண்டு சமா ளிப்பது சிறிது சிரமமாய்த்தா னிருந்தது. அன்று சாயந்திரம் அவன் விளக்கேற்றாமல் அறையில் உட்கார்ந்து ஆழ்ந்த யோசனையி லிருந்தது, முதல் நாள் மங்களம் வாங்கிக் கொண்டு போன தீப்பெட்டி திரும்பி வாராததின் காரணம்தான். முப்பத்தி ரண்டு படிகள் ஏறி மாடிக்குப் போவது அவனுக்குச் சிரமமாக இல்லை. 'நெருப்புப் பெட்டி வேணு'மென்று அவன் வாயைத் திறந்து கேட்பதற்குள் படும் பாடுதான் பிரமாதமா யிருந்தது. இருந்தாலும் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன்போல் தனக்குத் தானே சமாளித்துக் கொண்டு மெதுவாக மாடித் தாழ்வாரத்தில் வந்து நின்றான். ஒரு கனைப்புக் கனைத்துத் தன்னைத் திடப் படுத்திக் கொண்டு, “ஸார்!” என்றான். வெண்கலமணி போல் கணீரென்ற குரலில், “யார்?” என்று கேட்டுக் கொண்டே வெளியே வந்த மங்களம், “நெருப்புப் பெட்டிதானே......?” என்று சொல்லிய படியே உள்ளே போனாள். விசுவநாதன் அவளை ஆவலுடன் எதிர்பார்ப்பவன் போல் வாசற்படியின் அருகிலேயே நின்று கொண்டிருந்தான்.

கையிலுள்ள கண்ணாடி வளையல்கள் 'கல கல' வென்று ஒலிக்க நெருப்புப் பெட்டியை அவனிடம் நீட்டினாள் மங்களம். அவள் முக அழகிலேயே லயித்திருந்த அவனுக்கு, அப் பொழுது அந்த அழகினிடையே தோன்றிய விஷமச் சிரிப்பிற்கு அர்த்த மென்ன வென்று எப்படித் தெரியும்?

கீழே இறங்கி வந்து இருட்டிடையே பெட்டியைத் திறந்து நெருப்புக் குச்சியை எடுப்பதற்குப் பிரயாசைப்பட்டான். பெட்டி ஓரத்தில் ஒரே ஒரு குச்சி ஒட்டிக் கொண் டிருப்பதுதான் அவன் கையில் தட்டுப் பட்டது. மங்களத்தின் அழகிய முகத்தில் தெரிந்த விஷமச் சிரிப்பின் அர்த்தம் அப் பொழுதுதான் அவனுக்கு விளங்கியது. அவன் தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டு பெட்டியிலிருந்து அந்த ஒரு குச்சியை

அடுத்த இதழில் :

**பாணிக்கிரகணம்**

ஆரம்பமாகிறது

எடுத்துக் கொளுத்தினான். அந்தக் குச்சி எரிந்த சுவடு தெரியாமல் அணைந்தது அவனது அதிர்ஷ்டமென்றுதான் சொல்ல வேண்டும். மறுபடியும் மாடிக்குப் போய் மங்களத்தின் முகத்தைப் பார்ப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைத்ததை அப்பொழுது அவன் அதிர்ஷ்டமாக நினைப்பதைத் தவிர வேறு எப்படி நினைக்க முடியும்?

அவன் கையில் விளக்கை எடுத்துக் கொண்டு மாடிக்கு வந்தான். அவனைக் கண்டதும் மங்களம் 'களுக்' கென்று சிரித்துவிட்டு, "எனக்குத் தெரியும், அந்த ஒரு குச்சியும் வீணாயிடும்னு!" என்று சொல்லிக் கொண்டே, கை விளக்கை எடுத்துக் கொண்டு வந்து அவன் கையிலுள்ள சிமிணியை ஏற்றினாள்.

அவர்களிருவர் கைகளிலு மிருந்த விளக்குகளின் பிரகாசம் அவர்களிருவர் முகத்தையும் ஒருவரை ஒருவர் பார்த்துச் சரியாகத் தெரிந்து கொள்ள உதவியா யிருந்தன. அதே விநாடியில் அவர்களிருவர் கண்களிலும் தோன்றிய பிரகாசம் ஒருவர் முகத்தை ஒருவர் சரியாகத் தெரிந்து கொள்ள உதவியா யிருந்தன.

★

மறுநாள் காலை. அவன் வேலைக்குப் போகச் சித்தமா யிருக்கும் பொழுது, "ஸார்!" என்று கூப்பிட்டபடியே வாஞ்சிநாதய்யர் அறைக்குள் நுழைந்தார். விசுவநாதன் "வாங்கோ!" என்று அவரை மனமாரக் கூப்பிட்டு உபசரித்தான். "நேற்று ராத்திரி ஒன்பது மணி வரையில் ஒரு கடை வாசலில் நின்று ஒரு நெருப்புப் பெட்டி வாங்கப் பட்ட பாடு பெரும் பாடாகப் போயிடுத்து, ஸார்! மங்களம் சொன்னா, உங்ககிட்டே சுத்தமா நெருப்புக் குச்சியே இல்லேன்னு! ஒரு பத்துக் குச்சி கொடுத்துட்டுப் போகலாமுன்னு எடுத்துக் கொண்டு வந்தேன். எங்கே ஒரு காலி நெருப்புப் பெட்டி இருந்தா எடுங்கோ!" என்றார் வாஞ்சிநாதய்யர்.

விசுவநாதன் நெருப்புப் பெட்டியை எடுத்துக் கொடுத்தபடியே, "ஸார்! நீங்க இரண்டு நாள் முன்னாலே ஒரு யோசனை சொன்னீர்கள் பாருங்கோ......" என்று தயக்கத்தோடு இழுத்தான்.

வாஞ்சிநாதய்யர் எதிர்பாராத ஒரு விஷயத்தைக் கேட்க ஆவலுள்ளவர்போல் அவன் முகத்தைப் பார்த்துக்கொண்டே, "ஆமாம், அதைப் பற்றி என்ன?" என்றார்.

"நானும் யோசனை செய்து பார்த்தேன்......"

"நீங்க யோசித்துப் பார்த்திருப்பீங்கன்னா கட்டாயம் நான் சொன்னதுதான் உங்களுக்குச் சரியானதாகப் பட்டிருக்கும்."

"யோசித்துப் பார்த்ததிலே கிரகஸ்தனாகிறதிலே நீங்க சொன்ன சௌகரியங்க ளிருக்கோ இல்லையோ, ஆனால் அப்படி இருக்கிறதுதான் மனசிற்குச் சந்தோஷமும் நிம்மதியுமா யிருக்கும் போலிருக்கிறது!"

"ஹூம்......அப்படி வாங்கோ, வழிக்கு! இப்போதாவது உங்களுக்குக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டந்தானே? எங்க மங்களத்தை உங்க மனசுக்குப் பிடிச்சிருக்கா?"

"நான்தான் அப்பவே சொல்லிட்டேனே? என் மனசிலே ஏதாவது மாறுதல் ஏற்பட்டால் உங்க யோசனைப்படி நடக்கிறேன்னு! இனிமேல் உங்க அபிப்பிராயப் படிதான்......"

"சரி! இந்த மாசத்திலேயே ஒரு முகூர்த்த நாளைப் பார்த்து......" என்று இழுத்தார் வாஞ்சிநாதய்யர்.

"சரி; உங்க அபிப்பிராயப்படி செய்யுங்கோ!" என்றான் விசுவநாதன்.

★

மாலை வேளை. வெளி மாடியில் காற்றோட உட்கார்ந்து விசுவநாதனும் மங்களமும் பேசிக் கொண்டிருந்தனர். வாஞ்சிநாதய்யர், "மாப்பிள்ளை, மாப்பிள்ளை!" என்று கூப்பிட்டுக் கொண்டே வந்தார் பரபரப்போடு. மங்களம் அவரைக் கண்டதும் சட்டென்று எழுந்து, "என்ன அப்பா?" என்றாள்.

"ஒண்ணுமில்லே; கடைத் தெருவிலே ஒரு கடையிலே 'கியூ'விலே நின்னா ஆளுக்கு ஒரு தீப்பெட்டி தருகிறாளாம். மாப்பிள்ளையும் நானும் போனா இரண்டு பெட்டியா வாங்கிக்கொண்டு வரலாம்......"

"'கியூ'விலேயா? நீங்க ரெண்டு பேரும் போய் நின்னுட்டா இந்த யுகத்துக்கு வர முடியுமா? நான் இங்கே ஒண்டியா இருக்கணும். நீங்க மாத்திரம் போய் வாங்கிக் கொண்டு வாங்கோ, அப்பா! ஒரு நெருப்புப் பெட்டியே போதும். அதை வைத்துக் கொண்டே நான் இரண்டு மாதம் ஓட்டி விடுவேன்!" என்றாள் மங்களம்.

வாஞ்சிநாதய்யருக்கும் அது உசிதமாகப் பட்டது. விசுவநாதனும் மங்களம் தன்னை ஒரு பெரிய கஷ்டத்திலிருந்து தப்புவிக்கச் செய்த சந்தோஷத்தோடு, "ஆமாம்; அதுதான் சரி!" என்றான்.



# மல்லம்மா

கனகம் ராமதாஸ்

பூலோகத்தின் வடக்கு பாகம் முற்றிலும் புகைவிட்டெரிந்து போனதுபோல் கரும் மேகங்கள் பரவிக்கிடந்தன. மழையின் குளிர்ந்த மணம் வடக்கு முகத்திலிருந்து மெல்ல வந்து, "நான் வரப் போகிறேனே" என்று அறிவித்தது. என் மனதில் இருந்த அர்த்தமற்ற ஒரு பீதிக்கும் இந்த மேகங்களின் இந்திர ஜாலத்துக்கும் ஏதோ சம்பந்தம் இருப்பதாகவே என் மனதுக்குப் பட்டது. வீணாக மனதை வருத்திக் கொள்வதில் லாபமில்லை என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டு தலையை உள்ளுக்கிழுத்துக் கொண்டேன். நிம்மதி தரும் வேறு எதையாவது கவனிக்கலாம் என்று பார்த்தேன். ஆனால் சுற்றிச் சுற்றி, மறுபடியும் தரையிலேயே போய் மோதிக்கொள்ளும் சக்கரத்தைப் போல என் சிந்தனையும் ஒரு சிறு வட்டத்துக்குள்ளேயே சுழன்று சுழன்று வந்தது.

சென்ட்ரல் ஸ்டேஷனைக் கடந்து வண்டி புறப்பட்டு இரண்டு மணி நேரம் ஆகியும் மனம் ஒரு நிலையில் இருப்புக் கொள்ள மறுத்தது. பெட்டிக்குள் என் அப்பா, அம்மா, தம்பி ஜனா, சகோதரிகள் நளினி, சரோஜா, சகுணா, என் அப்பாவைப் பெற்ற பாட்டனார், எங்களைச் சேர்ந்த வேறு சில உறவினர் இருந்தனர் — எல்லாரும் அரை உறக்க நிலையில் இருந்தனர்.

பெங்களூரில் யாரோ ஒரு மனுஷர்! அவரை நானும் அம்மாவும் முன்பின் பார்த்ததேயில்லை. எப்படியோ அப்பா அவரைப் பார்க்க நேர்ந்ததாம். உடனே விவாகத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டார். என்னுடைய சம்மதமோ, அல்லது அம்மாவுடைய சம்மதமோ கேட்கப்படவேயில்லை.

இடியும் மின்னலும் எங்கோ யுத்த முனையிலிருந்து கேட்கும் இரைச்சல் போல் மங்கலாக, ஆனால் பயங்கரமாகக் கேட்டுக் கொண்டேயிருந்தது.

'தடக்' என்று வண்டி ஒரு குலுங்குக் குலுங்கி நின்றது. ஏதோ ஒரு ஸ்டேஷன். மறுபடியும் சிந்தனையிலாழ்ந்தேன்.

"என்ன ஸ்டேஷன்?"

தலையை நீட்டி வெளியே பார்வையைச் செலுத்தினேன். பிளாட்பாரத்தில் ஒரே ஜல மயம். வண்டி வருவதற்கு முன் அடாது மழை பெய்திருக்கலாம். மழை அப்போதும் 'பொசு பொசு' வென்று தூறிக்கொண்டுதானிருந்தது. மங்கலான வெளிச்சத்தில் ஸ்டேஷன் பெயரைக் காட்டும் பலகை நன்றாய்த் தெரியவில்லை.

"என்ன டேஷனுங்கோ, எம்மா?" என்று கேட்டுக் கொண்டே 'ஜிவ்'வென்று எழுந்து உட்கார்ந்தாள் ஒரு பெண். அவள் ஒரு கிராமாந்திரத்துப் பெண். ஆனால் நல்ல குளுமையான சிவந்த மேனி. கச்சலான சரீரம். அந்தக் குளிர்ந்த, கபடமற்ற முகத்தின் வலது கன்னத்தில் ஓர் அழகிய மரு.

'டேகோலன் க்ரீ'மிலும் 'காஸ்மிக்' சோப்பிலும் கிடைக்காத அந்த சௌந்தர்யம் அவளுடைய முகத்தில் இயற்கையாகப் பூத்துக் கிடந்தது. எனக்கு ஒரு துணை அகப்பட்டாள் பேசுவதற்கு. ஆனால் அவள் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல, ஸ்டேஷன் பெயரைத்தான் காண முடியவில்லை.

"அதுதான் தெரியலே!" என்றேன் நான். அவள் கண்ணைத் தேய்த்துக் கொண்டே என்னோடு பேச ஆரம்பித்தாள்.

"எம்மா! உனக்கு எழுத்துத் தெரியவில்லே?"

"தெரியும், ஆனால் மழையிலே எழுத்து தெரியலே!" என்றேன்.

நான் பெரியவளாகி இரண்டு வருடங்கள் ஆகியிருந்தன. என்னுடைய சிந்தனைப் புருஷனின் உருவத்தை நான் எப்படி எப்படியோ சிருஷ்டி செய்து வைத்திருந்தேன். அப்பா என்னைக் கேட்காமல் எனக்குப் புருஷனைக் கண்டு பிடித்து, விவாகமும் செய்து கொடுத்துவிட அழைத்துப்

போய்க் கொண்டிருப்பதுதான் எனக்கு மிகவும் வருத்தமாயிருந்தது.

புதிய மனிதர் — எனது வரப்போகும் கணவர்—அவர் முகம், வீடு, ஊர், அவரோடு பின்னப் போகும் எனது வாழ்க்கை— இவைகளை யெல்லாம் ஒருவாறு யூகம் செய்து கொண்டேயிருந்தேன். எனக்குத் தூக்கம் வரவேயில்லை.

"இந்தே பாரம்மா, அவரு ஒரு மாதிரியான மனுசன்! உஜாரே கிடையாது. எங்காச்சும் தூங்கிப்போட்டு அப்பறம் பறக்கப் பறக்க முழிப்பாரு!" என்றாள்.

'ஒரு மாதிரியான மனுசன்' என்று அவள் குறிப்பிட்டது, அவளுடைய கணவனைத்தான் இருக்கும். ஆனால் தன்னுடைய கணவனைப் பற்றிக் கேவலமாகச் சொன்னதாக அதன் அர்த்தம் தொனிக்கவேயில்லை. சொந்த பாத்தியத்தின் பாவம் அதில் சுடர் விட்டு எரிந்தது.

எவ்வளவு பெருமை அவளுக்கு! எவ்வளவு சொந்தம் அவளுக்கு அவனிடம்? எனக்கு வாய்க்கப்போகும் 'மனுசன்'கூட அப்படித்தான் இருப்பான். அல்லது......?

"யார் அந்த மனுசன்?" என்று நான் கேட்டேன்.

"அவருதான், எங்க வீட்டுக்காரர்! திருவள்ளூர் டேசன்லே பாக்கலியா, நீ? குடுமி வட்டுண்டு, காதுலே கடுக்கன் போட்டுண்டு, செவப்பா ஜன்னல் ஓரமா வந்து நின்னாரே—அவருதான்!" என்றாள்.

"ஓ! அவரா! மனுஷன் பலே கோபக்காரர்போல் இருக்கிறதே? என்ன, நான் சொல்லுவது?" என்றேன்.

"அவருக்குக் கோவமே வரதில்லேம்மா! பாத்தா அப்படித்தான் தோணும். தங்கமானவர். நான் சொல்றதுக்குக் குறுக்கே ஒண்ணும் சொல்லாது!" என்றாள் பெருமிதத்துடன்.

"ஆமாம், எத்தனை நாள் ஆச்சு கல்யாணம் ஆகி?" என்று கேட்டேன்.

"மூணு நாள்தான்!"

"மூணு நாளா! அடி பாவி! இதுக்குள்ளே இப்படி உயிரை விடுகிறீர்களே, ரெண்டு பேருமா!" என்றேன் நான் அதிசயத்துடன்.

விவாகம் ஆனவுடன் புத்தம் புதிய மனிதனுடன் எப்படி சங்கோசம் இல்லாமல் பேசுவது? அதுவும் மூன்றே நாட்களுக்குள் என்று அந்தப் பெண் சொன்னதும் எனக்கு ஆச்சரியமாய்ப் போய்விட்டது. அவள் என்ன பதில் சொல்லப் போகிறாள் என்று அவள் வாயையே பார்த்துக்கொண்டிருந்தேன். அவள் ஆரம்பித்தாள்:

"எங்க உறவே ஒரு ஜோரான கதையம்மா! மொதல்லே நான்கூட பயந்துவிட்டேன். ஆனால் நல்ல வேளையா நான் நெனைச்சபடியே நடந்து போச்சு!" என்றாள்.

அவளுடைய கதையில் ஏதோ ஸ்வாரஸ்யம் இருப்பதாகத் தெரிந்தது. புது மணத் தம்பதிகளுக்குள்ளே அன்பு எப்படித்தான் ஏற்படுகிறது என்று அறிய என் மனம் விழைந்தது. தூக்கமோ வருவதாகத் தெரியவில்லை. மெல்ல அந்தப் பெண்ணின் வாயைக் கிளறிவிட்டுக் காலத்தைப் போக்கலாம் என்று நினைத்தேன்.

"ஏ, பிள்ளே! எனக்குத் தூக்கம் வரவில்லை. உன்னுடைய கதையைச் சொல்லேன்!" என்றேன்.

"இல்லேம்மா, கதை சொல்லிண்டே இருந்தா டேசனு பேரை மறந்துடுவேன். அந்த மனுசன் எங்காச்சும் தூங்கிடுவார். அது வாணும், வேறே ஏதாச்சும் பேசுங்கோ!" என்றாள்.

"இல்லேம்மா, நான் ஒவ்வொரு ஸ்டேசன் பெயரையும் சொல்லிக் கொண்டே



வருகிறேன். ஆமாம், நீ எங்கே போக வேண்டும்?" என்றேன்.

"நானு, கிருஷ்ணாபுரம் போகணும். ஆனால் வாணியம்பாடியிலே இறங்கணும். எனக்கு அந்த ஊரு எப்பவும் தெரியாது. நான் பார்த்ததேயில்லே. இதான் முதல்!" என்றாள்.

"சரி, சரி; அப்படியானால் நான் ஒவ்வொரு ஸ்டேஷன் பெயரையும் சொல்லிக் கொண்டே வருகிறேன். வாணியம்பாடிக்குக் காலை மூன்று மணிக்குத்தான் போய்ச் சேரும். நீ பயப்படாதே, நான் இருக்கிறேன்!" என்று அவளுக்குத் தைரியம் சொன்னேன்.

'நடக்' என்று வண்டி நின்றது.

"இதென்ன டேசனு!" என்றாள் அவள்.

ஸ்டேஷன் பெரிய ஜங்ஷன். பிரகாசமான விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. 'அரக்கோணம் ஜங்ஷன்' என்று பெரிய பெரிய எழுத்துக்கள் தெரிந்தன.

"இதுதானம்மா, அரக்கோணம் ஜங்ஷன்" என்றேன் நான்.

## 2

"ஏய், மல்லம்மா! காப்பி குடிக்கறயா?" என்றது ஒரு குரல்.

என் பக்கத்தில் இருந்த மல்லம்மா வாயை அகலத் திறந்து ஒரு சிரிப்புச் சிரித்தாள்.

"காப்பி வாணாம்; மோரு கிடைச்சாப் பாரு!"

"மோரு இந்த அர்த்த ராத்திரியிலே யார் சாப்பிடுவாங்க? சாப்பிட வேண்டுமானாலும் யார் விற்பாங்க? மோர் வாணாம்; ஜலதோஷம் பிடிச்சுக்கும். காப்பியே குடி!" என்று சொல்லிக் கொண்டு ஒரு 'கப்' காப்பியை வாங்கிக் கொடுத்தான் அவன்.

பிறகு, "மல்லம்மா, தூங்கிடப் போறே! உஷார்! நான் வரேன்! பத்திரம், பத்திரம்!" என்று சொல்லிக் கொண்டே அவன் நகர்ந்தான்.

"சரி, சரி; தூங்கிடப் போறே! வாணியம்பாடி ஞாபகம் இருக்குதா? மறந்துடப் போறே!" என்று கத்தினாள் மல்லம்மா.

"மறக்க மாட்டேன்" என்று சொல்லிக் கொண்டே அவன் போய்விட்டான்.

அவளுடைய கணவன் போய் வண்டிக்குள் ஏறி உட்காரும் வரை அவனுடைய முதுகையே பார்த்துக் கொண்டிருந்த மல்லம்மா, தன் யதாஸ்தானத்தில் வந்து அமர்ந்தாள் பழையபடி.

'கணவன்மாரிடம் கன்னிப் பெண்களுக்கு எப்படித்தான் இந்தப் பரிவு ஏற்பட்டு விடுகிறதோ? விவாகத்துக்கு முன் அது எங்கே பதுங்கி இருக்குமோ?' என்று நான் என்னையே கேட்டுக் கொண்டேன்.

"மல்லம்மா! மறந்து விட்டாயே, கதை சொல்ல?" என்றேன்.

"ஏ, அம்மா! என்னைத் தொலைச்சுப் பிடறயே! உனக்கு இன்னும் கல்யாணம் ஆகலே போலிருக்கிறது!" என்றாள் அவள்.

"எனக்கா, எனக்குக் கல்யாணம் ஆகி மூன்று வருஷம் ஆச்சே!" என்று ஒரு போடு போட்டேன்.

வண்டியின் மூலையிலிருந்து 'களுக்' கென்று ஒரு சிரிப்புத் தோன்றி மறைந்தது. என்னுடைய அக்காள்தான் அது.

தலையை வெளியே நீட்டிக்கொண்டே சொன்னாள் மல்லம்மா.

"நான் சின்னவளா யிருக்கும்போதே எங்க அம்மா செத்துப்போச்சு. அப்பாவுக்கு நான் ஒரே கொளந்தே. என்னை வளர்க்கிறதுக்கும், அப்பாவுக்குச் சமையல் பண்ணிப் போடறதுக்கும் எங்க சித்தியை அப்பா கல்யாணம் செய்துக்கிட்டார். ஏழரைநாட்டுச் சனியனும் அன்னைக்கே என்னைப் புடிச்சுக்கிட்டது. கிணத்திலே இருக்கிற தண்ணி யெல்லாம் வீட்டிலிருக்கிற பாத்திரங்களிலே நிரப்பி வைக்கிறது முதல், ராத்திரிக்கு சுடு தண்ணீர் காய வைக்கும் வரை எல்லாம் என் வேலைதான். பிறகு சமையல். ராத்திரியிலே என் கட்டையைத் தரையிலே போடற வரை ஓயாத வேலை......"

"உங்க அப்பா ஒன்றும் கேட்டதில்லையா?"

"அப்பாவா! அவரு இல்லாட்டா நானும் என் கட்டையும் எப்பவோ கிணத்திலே மிதந்து போயிருப்போமே! எங்க சித்தி பலே கைகாரி. அப்பா இருக்கும் வரைக்கும் என்னை ஒன்றும் சொல்லமாட்டாள். அவர் தலை மறைஞ்சதும் பூசைதான்!"

"உங்க அப்பா மறுபடியும் வீட்டுக்கு வந்த பிறகு நீ சித்தி செய்ததை யெல்லாம் ஏன் அவரிடம் சொல்லக்கூடாது?"

"சொல்லிட்டா அப்பா போன அப்புறம் என் முதுகுத் தோல் பிஞ்சிடும், அம்மா!"

"சரி, அப்புறம் சொல்லு?"

'நடக்' என்று வண்டி நின்றதும் "எம்மா, இது என்ன டேசன்?" என்று கேட்டாள் மல்லம்மா. இது 'வாலாஜா ரோட்' என்று சொன்னேன்.

"பிறகு நான் அடியும் உதையும் பட்டுப் பெரியவளாகி விட்டேன். நான் பெரியவளான பிறகுகூட வீட்டுக்கு வெளியே இருக்கும் ஜோலியை யெல்லாம் செய்யாமல் சித்தி என்னை விடமாட்டாள். ஒரு நாள் எங்க பசுமாடு ஒண்ணு சாயங்காலம் ஆகியும் வீட்டுக்கு வரலே. தேடிக்கிட்டு நான் கௌம்பினேன். ஏரி, மந்த வெளி, களத்து மேடு, தோப்பு எங்கேயும் காணலே. பவுண்டிலே போய்ப் பார்க்கலாம்னு நினைச்சேன். ஆனா நாளைக்குப் பாத்துக்கலாம்னு திரும்பிட்டேன். ஏரிக் கரையைச் சுத்திக்கிட்டுப் போனா ரொம்ப தூரம்னு வயல் வழியா குறுக்கே நொழைஞ்சேன். மழை பிடிச்சுக்கிட்டது. தெப்பக் கட்டையா நனைஞ்சுட்டேன். பிறகு ஓடிப் பிரயோசனம் இல்லேன்னு நனைஞ்சுக்கிட்டே வீட்டுக்கு வந்து சேர்ந்தேன். வீட்டுக்கு வந்தபோது ராத்திரி பத்து மணி இருக்கும். கதவு திறந்து இல்லே!"

"ஏன், சித்தி தூங்கிட்டாளா?"

"சித்தி தூங்கலே. அவகூட மாட்டைத் தேடிண்டு வெளியே போயிருந்தாள். கதவுக்கு வெளியே திண்ணை மேலே உட்கார்ந்தேன். குளிர் நடுக்குச்சி. இருட்டிலே ஒண்ணுமே தெரியலே. மாடு ஒரு வேளை பட்டியிலே இருக்குமோன்னு எழுந்து போய்ப் பார்த்தேன்; காணோம். ஆனா திண்ணை ஓரமாய் ஏதோ கறுப்பா ஒரு மூட்டை விழுந்து கிடந்தது. கிட்டே போனேன்!"

"உனக்குப் பயம் இல்லையா?"

"எங்களுக்கு என்னம்மா பயம்? நாங்க தோட்டம், துரவு எல்லாம் ராத்திரி முழுக்கச் சுத்திச் சுத்தி வருவோமே!"

"அப்புறம், யார் இருந்தது அங்கே?'

"அதான் சொல்றேனே, துணியை விலக்கிப் பார்த்தேன். தாடியும் மீசையுமா ஒரு மனுசன் இருந்திச்சி. 'யாரு?'ன்னு கேட்டேன். எனக்குக் கைகாலெல்லாம் ஒதருச்சி. அந்த மனுசன் 'லொக்' கொட்டும் சத்தம் கேட்டுது. கிட்டப் போய்ப் பாத்தேன். குளிரும், ஜுரமும் கௌவிக் கொண்டு இருந்திச்சி. மொதல்லே பயமா தான் இருந்திச்சி. 'ஐயோ பாவம்!'னு அப்புறம் ஒரு எண்ணம் வரலே, நெருப்பு மூட்டி உடம்பைக் காய வைக்கலாம்னு நினைச்சேன். ஆனா கதவுதான் பூட்டியிருந்துச்சே, அதனாலே நெருப்புக் கிடைக்கலே. யாரோ நமக்கென்னன்னு போய்த் திண்ணை மேலே படுத்துக்கிட்டேன். கொஞ்ச நாழிக்கப்புறம் 'தண்ணி, தண்ணி!'ன்னு அந்த மனுசன் மெதுவா சொல்லுச்சி. எனக்கு மனசு தாங்கலே. போனால் போகிறதன்னு தண்ணீர் கொடுக்கலாமனு எழுந்தேன். மறுபடியும் வீடு பூட்டிக் கிடந்தது கவனத்துக்கு வந்துச்சி. மழையிலே என்னோட புடவை தெப்பக்கட்டையாய் நனைஞ்சு போயிருந்ததில்லே, அதைப் பிழிஞ்சி அந்த ஆள் வாயிலே விட்டேன். தண்ணியைக் குடிச்சதும் அப்படியே சோர்ந்து போய் என் மேலேயே சாஞ்சுட்டுது!"

"அன்னிய மனுசன் உன் மேலே படுக்கிற போது உனக்குச் சங்கோசமா யில்லையா!"

"அம்மா, அம்மா! நான்கூட மொதல்லே உன்னைவிட ரொம்ப சங்கோசப்பட்டவள் தான். ஆனா அந்த மனுசன் என் மேலே சாஞ்சதுக்கப்புறம் என் கைகாலெல்லாம் சோர்ந்து போச்சு. தானாவே அவரு மேலே ஒரு பாசம் வந்துட்டுது. மெதுவா அவர் தலையைக் கீழே இறக்கி வைச்சுட்டுத் தெருவிலே வந்து பார்த்தேன். என்னோட ஓரகத்தி வீட்டிலே விளக்கு தெரிஞ்சது. அன்னைக்கு அவளோட கொழந்தைக்கு போறதும் வாறதுமாயிருந்தது. அங்கே போய் நெருப்புக் கொண்டு



வந்து கட்டைகளைப் போட்டுக் கொளுத்தினேன். அந்த மனுசனுக்குக் கொஞ்சம் நிதானம் வந்தது. இந்தச் சமயத்திலே 'அடி மல்லம்மா!'ன்னு சித்தி தெருவிலேயே நின்னுக்கிட்டுக் குரல் கொடுத்தாள். 'என்?'னு எழுந்து போனேன். 'துரோபதை (என் நாத்தி) யோடே கொழுந்தைக்கு ரொம்பக் கஷ்டமா யிருக்குது. இந்தா சாவி, வீட்டைத் திறந்து படுத்துக்கோ! நான் அங்கே போறேன். உங்க அப்பா சமுனிக்காட்டி லிருந்து வந்தால் உரியிலே சோறு இருக்கு, போடு!' என்று சொல்லிவிட்டு நகர்ந்தாள்.''

"உன் சித்தி உன்னையும் அந்த மனுசனையும் பார்க்கலையோ?''

"நல்ல வேளையாப் பாக்கலே! அப்புறம் நான் உள்ளே போய் இஞ்சித் தண்ணிப் போட்டு அவரைக் குடிக்கச் சொன்னேன். அப்புறம் மெதுவா நடக்க ஆரம்பிச்சார். திண்ணைமேலே கம்பளியைப் போட்டு அப்படியே படுக்க வைச்சுட்டுக் காலண்டை ஒரு கணப்புச் சட்டியையும் வச்சேன். நான் உள்ளுக்குப் போய்ப் படுத்த அப்புறம் எனக்குத் தூக்கமே வரலே. சித்தே நேரத்துக்குள்ளே அப்பாவும் சித்தியும் வந்தார்கள். என்னைத் தூக்கி வாரிப் போட்டுவிட்டது......''

"என்?''

"அந்த மனுசனைப் பாத்துட்டால்?''

"பிறகு பார்க்கவே யில்லையா?''

"பார்த்தார்கள். 'யார் இது?'ன்னு என்னைக் கேட்டாங்க. நான் நடந்ததையெல்லாம் சொன்னேன். ஆனால் அவருக்கு நான் செய்த உதவிகளை மாத்திரம் சொல்லலே. அப்பா ரொம்பக் கோவிச்சுக்கிட்டார். அப்புறம் அப்பாவே அவரைத் தூக்கி நெருப்பண்டை உட்கார வைச்சார். நெருப்பை ஊதி ஊதி விட்டார் அப்பா. நெருப்பு ஒன்று வெடிச்சி, அந்த மனுசனோடே சோத்துக் கைமேலே உழுந்தது. 'ஐயையோ'ன்னு மனுசன் துடிச்சுட்டார். எனக்கு ரொம்ப துக்கமாப் போச்சி!''

"அடடே! என்னடி அம்மா, அதுக்குள்ளே உனக்கு!''

"எம்மா! என்னைக் கேலி பண்ணால் அப்புறம் சொல்ல மாட்டேன்!'' என்று கோபித்துக் கொண்டாள் மல்லம்மா. 'நடக்' என்று வண்டி நின்றது.

"என்ன டேசனு?''

"இது காட்பாடி, இன்னும் ரொம்ப தூரம் இருக்கிறது வாணியம்பாடி'' என்றேன் நான். ஆனால் வாணியம்பாடி என்ற பெயரைக்கூட நான் அதற்குமுன் கேட்டதில்லை.

"மல்லம்மா, மேலே சொல்லு!'' என்றேன்.

பையிலிருந்து வெற்றிலைச் சருகை எடுத்து வாயின் வலதுபுற ஓரமாய்த் திணித்துக் கொண்டே அவள் சொல்லலானாள்:

"அவரு கையிலே நெருப்புப் பட்ட இடத்திலே காலணா அகலம் வெந்துப் போச்சி. அன்னைக்கிப் பொழுது விடிஞ்சதுக் கப்புறம் அந்த மனுசனை காணவே யில்லே. எங்கே போனாரோ தெரியலே. எனக்கு மனசு ரொம்ப வேதனையா யிருந்துச்சி. எப்பப் பாத்தாலும் அவருமேலேயே கவனமாய்ப் போயிடுச்சு. போதாக் குறைக்குக் கொஞ்ச நாளைக்கப்புறம் ஒரு கிழவனும் கிழவியும் வந்து அவங்க பிள்ளைக்கு என்னைக் கொடுக்கணும்னு கேட்டாங்க. அப்பாவும் கொடுக்கிறேன்னு சொல்லிட்டார். நான் 'வேண்டாம்'னு சொல்லிப் பாத்தேன். 'முடியாது'ன்னு சட்டுப்புட்டுன்னு கல்யாணம் முடிஞ்சு போச்சு...''

"அப்படின்னா அந்தப் பழைய மனுசனை மறந்துட்டயா?''

"மறக்காமல் என்ன பண்றது? அதுக்காகத்தான் அப்பாவிடம் நான் கட்டிக்க மாட்டேன்னுகூடச் சொன்னேன். கல்யாணம் என்னமோ ஆய்போச்சு. கல்யாணத்துக்கப்புறம் ஒரு நாள் நான் எங்க வீட்டிலே தனியா யிருந்தேன். அப்பாவோ, சித்தியோ இல்லே. அன்னிக்கி அந்த மனுசனைப் பாத்தப்போ மழை எப்படி இருந்ததோ அதேமாதிரி பெஞ்சுண்டே இருந்துச்சி. என் புருசன் வீட்டுக் குள்ளே நுழைஞ்சது. 'யார்?'னு கேட்டேன். 'நான்தான் ஐயப்பன்'னு சொன்னது. நான் பேசாமே உட்கார்ந்துகிட்டு இருந்தேன். அது என் பின்னாலே வந்து முதுகிலே கையை வச்சது. 'தூரப் போ'ன்னு நான் சொன்னேன். என் மனசெல்லாம் அந்தப் பழைய மனுசன் மேலேயே இருந்துச்சு. 'என்?'னு அது கேட்டது. 'நான் முன்னாடியே ஒரு மனுசன் மேலே

பிரியம் வச்சுட்டேன்'னு திடுதிப்புன்னு சொல்லிப்பிட்டேன். 'மல்லம்மா, நான் தான் அந்த மனுசன். இதோ பாரு'ன்னு என் கன்னத்தைப் பிடிச்சது. எனக்குத் தூக்கி வாரிப்போட்டது......"

'டக்' என்று வண்டி நின்றது.

"என்ன டேசனு?" என்றான் அவன்.

"இதுவா! இது குடியாத்தம்!"

"அப்புறம் அந்த மனுசனுடைய சோத்துக் கையைக் காட்டச் சொன்னேன். அதுலே அந்த நெருப்புக் காயம் அப்படியே ஆறாமல் இருந்தது. நான் நெனைச்ச மாதிரி நடந்ததுன்னு அப்படியே அவரைக் கட்டிக் கிட்டேன்."

"நீ கொடுத்து வச்சவள், மல்லம்மா! கல்லோ கட்டியோ உன் மனதுக்குப் பிடித்த கணவன் உன் இஷ்டப்பிரகாரம் கிடைத்தது உன்னுடைய புண்ணியம் தான்!" என்றேன்.

"இன்னும் கொஞ்சத்தையும் கேட்டு டும்மா! அப்புறம் என் சந்தோசம் சொல்ல முடியலே. அப்பாவுக்கு இது தெரிஞ்சதும் அவரும் ரொம்ப சந்தோசப் பட்டார். இதோ. இப்ப அவரோடே எங்க மாமியார் வீட்டுக்குப் போறோம்!" என்றாள்.

வண்டியின் மூலையிலிருந்த அப்பாவையும், அவருக்கு எதிரே தூங்கிக் கொண்டிருந்த அம்மாவையும் பார்த்தேன். அவர்கள் மேல் எனக்குக் கோபம் பொங்கிக்கொண்டு வந்தது. சாதாரண ஒரு கிராமத்துப் பெண்ணுக்குக் கிடைத்த சந்தர்ப்பம்கூட நமக்குக் கிடைக்கவில்லையே என்று என் மனம் புழுங்கிக் கொண்டிருந்தது. வெளியே எங்கிருந்தோ ஊதல் காற்று வந்து கண்களில் மோதியது. என் கண்களிலிருந்து நீர்த் துளிகள் பொட்டுப் பொட்டாகப் பெட்டியின் ஜன்னல் கட்டையின் மேல் விழுந்து கொண்டிருந்தன. என் வருங்கால வாழ்க்கையைப் பற்றி நினைத்துக் கொண்டே அயர்ந்து தூங்கிவிட்டேன்.

3

"சின்னு! காப்பி சாப்பிடுகிறாயா?" என்றார் அப்பா.

மல்லம்மாவை நான் ஏமாற்றி விட்டேன். என்னை நம்பி அவள் மோசம் போனாள். என் உதடுகள் துடித்தன.

"அப்பா, இது என்ன ஸ்டேஷன்?" என்று பெரிய குரலில் கேட்டேன்.

"இதுவா, இது காமசமுத்திரமம்மா!" என்றார்.

"காமசமுத்திரம்! அப்போது வாணியம் பாடி போய்விட்டதா?"

"என்னம்மா, வாணியம்பாடி போய் ஒரு மணி நேரத்துக்கு மேல் ஆச்சே! நீ தூங்கி விட்டாயாக்கும்? பெங்களூருக்கு விடியற்காலைதான் போகும். இந்தா, இந்தக் காப்பியைச் சாப்பிடு!" என்றார் அப்பா.

"மல்லம்மா! மல்லம்மா! மல்லம்மா!!" என்று அவளை எழுப்பினேன்.



எழுந்த எடுப்பிலேயே, "இது என்ன டேசனுங்க? அவரு ஒரு மாதிரி மனுசன், எக்காச்சக்கம் தூங்கிப் போய் விடுவார், உஜார் கிடையாது!" என்றான்.

என் மனம் கலங்கியது. எதையோ திருடி விட்டு விழிப்பதைப்போல விழித்தேன்.

“மல்லம்மா, உன் கணவன் ‘உஜார்’ கிடையாதுதான்! வாணியம்பாடி போய் நாற்பது, ஐம்பது மைல் ஆகிவிட்டது. நானும் தூங்கி விட்டேன்!” என்றேன்.

“ஐயையோ! அவர் எங்கே அலையறாரோ! நான் எங்கே அலையணுமோ! உன்னை நம்பி மோசம் போனேனே!” என்று அவள் அலறத் தொடங்கினாள்.

நானும் மற்றவர்களும் சேர்ந்து அவளைப் பெங்களூருக்கு அழைத்துப் போய், அவள் புருஷனுக்குக் கடிதம் எழுதுவதாகக் கூடச் சொன்னோம். அவள் கேட்கவேயில்லை. அதே ஸ்டேஷனில் இறங்க முயற்சித்தாள். நாங்கள் எல்லோரும் அவளை இறங்க விடாமல் பிடித்தோம். வண்டியும் நகர்ந்தது. மல்லம்மா தன் ஸ்தானத்தில் அமர்ந்தாள். வண்டி சற்று மெதுவாகப் போய்க் கொண்டிருந்தபோதே மல்லம்மா ஜன்னல் வழியாக வெளியே குதித்து ஓடிவிட்டாள்.

எங்கே ஓடினாள்?

அது எனக்கு எப்படித் தெரியும்?

ஏற்கனவே இருந்த விசனத்தோடு அந்த அன்னியோன்ய தம்பதிகளைப் பிரித்த பாவச் செயலும் என் இதயத்தைக் குத்திக் கொண்டேயிருந்தது.

காலை ஏழு மணி.

வண்டி பெங்களூரில் வந்து நின்றது.

அப்பாவும், அம்மாவும் என்னை அழைத்துக் கொண்டு போனார்கள். ஸ்டேஷனுக்கு வெளியே வாடகை மோட்டார் ஒன்றில் போய் நாங்கள் அமர்ந்தோம். அங்கிருந்து நாங்கள் உட்கார்ந்திருந்த ரயில் வண்டியில் உள்ள பெட்டியை நன்றாய்ப் பார்க்க முடிந்தது.

மல்லம்மா உட்கார்ந்திருந்த ஜன்னல் ஓரமுள்ள இடம் வெற்றிடமாயிருந்தது. மோட்டாரும் நகர்ந்தது. ஆனால் என் காதில் அன்றிலிருந்து இன்றுவரை தொனித்துக் கொண்டிருப்பது இந்தப் பேச்சுதான்:

“இதென்ன டேசனு? அவர் ஒரு மாதிரி மனுசனம்மா! உஜாரே கிடையாது. எக்காச்சக்கம் தூங்கிவிட்டு அப்புறம் முழிப்பார்!”

# வீடு கிடைத்தது!


1
...நீங்க எங்கேருந்துங்க காலிப் பண்ணிக்கிட்டு வாரீங்க? தயவு செஞ்சி சொல்லுங்க. அலேயா அலே யறேன் வீடே கிடைக்கமாட்டேங்கிறது.
மாரிமுத்து தெரு, விலே எட்டாம் நம்பர் பங்களா


2


மாரிமுத்து தெரு


?
8


5
ஏங்க. சுப்பையரு இந்த பங்களா விலேயா இவ்வளவு நாளா இருந்தாரு?
ரெஸாக்


ஆமாங்க. இவ்வளவுநாளா நான் காலி பண்ணச்சொன்னேன், கேட்கல்லே! இன் னிக்கி நான் சொல் லாமலேயே அவரே காலிப் பண்ணிட்டாரு!




# தேனீ

ராஜு

ஒரு காட்டில் ஒரு பொல்லாத கரடி இருந்தது. அதனிடம் ஒரு தேனீ வேலை பார்த்து வந்தது. கரடிகளுக்குத் தேன் சாப்பிடுவதில் மிகவும் பிரியம் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா? அந்தத் தேனைச் சேகரித்துக் கொடுப்பதற்காகவே அது தேனீயை வேலைக்கு அமர்த்திக்கொண்டிருந்தது. கரடியிடம் அதற்கு முன்னால் எத்தனையோ தேனீக்கள் வேலை பார்த்திருக்கின்றன. ஆனால் இப்பொழுது வேலை பார்க்கும் தேனீயைப் போல் அவை வெகு நாள் வேலை செய்யவில்லை.

அதற்குக் காரணம் அந்தக் கரடியின் பொல்லாத் தனந்தான். "உன்னுடைய வேலை எனக்குப் பிடிக்கவில்லை; நீ நிறையத் தேன் சேகரிப்பதில்லை; நீ சேகரிக்கும் தேன் இனிப்பாக இருப்பதும் இல்லை!" என்று இம்மாதிரி ஏதாவது குற்றங் குறைகளைச் சொல்லி, அது தன்னிடம் வேலைக்கு வரும் தேனீக்களை வீட்டுக்கு அனுப்பி விடும்.

கடைசியாக வேலைக்கு வந்திருந்த தேனீயிடம் கரடியினால் குற்றம் ஒன்றும் கண்டு பிடிக்க முடியவில்லை. ஏனென்றால், அந்தத் தேனீ அவ்வளவு சுறுசுறுப்பாக வேலை செய்தது. கரடிக்கு வேண்டிய அளவு தேனை விரைவில் சேகரித்துக் கொடுத்தது. அதனால் அந்தப் பொல்லாத கரடியிடம் அது வெகு நாள் வேலை பார்க்க முடிந்தது.

காட்டிலுள்ள மற்றக் கரடிகளிடம் வேலை பார்த்துவந்த தேனீக்கள் வம்புக்கு இழுத்தாலும், பொல்லாத கரடியிடம் வேலை பார்த்து வந்த சுறுசுறுப்புள்ள தேனீ அந்தத் தேனீக்களிடம் சேருவதில்லை. தன் காரியம் உண்டு, தான் உண்டு என்று அது தன் வேலையிலேயே கவனமாயிருந்து வந்தது. இதனால் அந்தத் தேனீயைக் கண்டால் மற்றத் தேனீக்களுக்குப் பிடிப்பதில்லை. அதை எப்படியாவது அவமானப் படுத்த வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டன.

ஒரு நாள் அக்காட்டில் உள்ள தேனீக்கள் சில சேர்ந்து ஒரு பந்தயம் வைத்தன. "காலை எட்டு மணியிலிருந்து மாலை ஆறு மணிக்குள் எந்தத்

தேனீ நிறையத் தேனைச் சேகரிக்கிறதோ, அந்தத் தேனீக்கு ஒரு பெரிய வெள்ளிக் கோப்பை பரிசாக அளிக்கப்படும். பெரிய ஆலமரத்தடியில் போடப் பட்டிருக்கும் நீளமான மேஜையில் வைத்திருக்கும் கண்ணாடிப் புட்டிகளில் தேனைச் சேர்த்து விட வேண்டும். ஒவ்வொரு தேனீயும் ஒரு கண்ணாடிப் புட்டியை எடுத்துக் கொள்ளலாம்!'' என்று காடு முழுவதும் தண்டோராப் போட்டு அறிவிக்கப்பட்டது.

எப்படியும் அந்தச் சுறுசுறுப்புள்ள தேனீதான் பந்தயத்தில் ஜயிக்கும் என்று மற்றத் தேனீக்களுக்குத் தெரியுமல்லவா? ஆகையினால் அவை பொல்லாத கரடியினிடம் சென்று அதனிடம் வேலை பார்க்கும் சுறுசுறுப்பான தேனீயைப் பற்றி வாய்க்கு வந்தபடி யெல்லாம் சொல்லி, அதைப் பந்தயத்தில் கலந்து கொள்ள உத்தரவு கொடுக்காதபடி செய்து விட்டன.

"பந்தயத்தில் ஜயித்தால் இந்தத் தேனீக்கு இறுமாப்பு வந்துவிடும்!'' என்று மனதில் தீர்மானம் செய்து கொண்டு, கரடி பந்தய தினத்தில் தேனீக்கு நிறைய விட்டு வேலைகளைக் கொடுத்தது. பந்தயத்தில் கலந்து கொள்ள உத்தரவு கொடுக்கும்படி தேனீ கரடியை எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தது. ஒன்றும் பிரயோசனமில்லை. கடைசியில் பகல் இரண்டு மணிக்கு, "என்னதான் சுறுசுறுப்பிருந்தாலும் இக்நேரத்திற்குப் போய் எப்படி ஜயிக்க முடியும்?'' என்று எண்ணித் தேனீக்கு உத்தரவு கொடுத்து விட்டுக் கரடி வெளியே உலாவப் போய் விட்டது.

நேரஞ் சென்று வந்த தேனீயைப் பார்த்து மற்ற தேனீக்கள், "இனிமேல் நீ எப்படிப் பந்தயத்தில் ஜயிக்கப் போகிறாய்?'' என்று கேட்டுப் பரிகாசம் செய்தன. ஏனெனில், அக்காட்டிலுள்ள பூக்களிலிருந்த தேனையெல்லாம் அந்தத் தேனீக்கள் ஏற்கெனவே எடுத்துப் பந்தயப் புட்டிகளில் சேர்த்து விட்டிருந்தன. இப்பொழுது வந்த தேனீ எங்கிருந்து தேனை எடுத்துக் கொண்டு வந்து சேர்க்க முடியும் என்று அவை நினைத்துத் தங்களுக்குள் சிரித்துக் கொண்டன. ஆனால் சுறுசுறுப்பான தேனீ அதையெல்லாம் காதில் போட்டுக்கொள்ளவேயில்லை. பரபரப்புடன் தேனைச் சேகரித்துத் தன் புட்டியில் சேர்ப்பதிலேயே முனைந்தது.

ஆறு மணி ஆயிற்று. தேனீக்களெல்லாம் ஏற்கெனவே குறிப்பிட்டிருந்தபடி தேன் சேகரிப்பதை நிறுத்தின. பந்தயத்துக்குத் தலைமை வகித்த ஆந்தை தேன் புட்டிகளை யெல்லாம் பார்த்துக் கொண்டே வந்தது. சுறுசுறுப்பான தேனீயின் புட்டியில்தான் தேன் நிரம்பி யிருந்தது. மற்றத் தேனீக்களின் புட்டிகள் பாதிதான் நிரம்பி யிருந்தன. உடனே ஆந்தை சுறுசுறுப்பான தேனீக்கு வெள்ளிக் கோப்பையைக் கொடுத்தது. காட்டிலுள்ள மிருகங்களெல்லாம் கைதட்டி ஆரவாரம் செய்தன.

மற்றத் தேனீக்களுக் கெல்லாம் ஒன்றும் புரியவில்லை. சுறுசுறுப்பான தேனீ எப்படி இவ்வளவு சீக்கிரத்தில் தேனை நிறையச் சேகரித்தது என்பது அவைகளுக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

உண்மையில் அந்தத் தேனீ எப்படிப் பந்தயத்தில் ஜயித்தது தெரியுமா? குறுகிய நேரத்தில் அவ்வளவு தேனைச் சேகரிக்க முடியாது என்பது அதற்கு நன்றாய்த் தெரியும். ஆகையால் தான் ஏற்கெனவே கரடி வீட்டில் சேகரித்து வைத்திருந்த தேனைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொண்டு வந்து, வெகு சுலபமாகத் தன் புட்டியில் சேர்த்து விட்டது!



பந்தயத்தில் எப்படி ஜயித்தால் என்ன? வெற்றிவெற்றிதானே?

# வெண்சாமரம்

க.ரா.

'வெண்சாமரம்' என்று இடக்கரடக்கலாகத்தான் குறிப்பிட்டுள்ளேன். விளக்குமாறு என வழங்கும் பொருளைப் பற்றித்தான் இந்தக் கட்டுரை!

"இது என்ன கூத்து! போயும் போயும் விளக்குமாற்றைப் பற்றித்தானா எழுத வேண்டும்? வேறு விஷயமே அகப்படவில்லையா? 'துடைப்பக் கட்டைக்குப் பட்டுக் குஞ்சலம்' என்பதுபோல், துடைப்பத்துக்குக் கட்டுரை வேறு கேடா?" என்று நேயர்கள் முணுமுணுப்பது காதில் விழுகிறது.

மனிதர்களுக்குள்ளே இருந்து வந்த உயர்வு தாழ்வெல்லாம் மறைந்து, சரி சமானமாக வாழ விரும்பும் இந்தக் காலத்திலே, கேவலம் துடைப்பக்கட்டை என்ற காரணத்துக்காக அதைத் தூரத் தள்ளிவிடக் கூடாதல்லவா? வீட்டுச் சாமான்களில் கேவலமான ஸ்தானத்தைப் பெற்றுத் தீண்டத் தகாத சாமானாக அது இருந்தாலும், அதற்கும் ஒரு பெருமையைக் கற்பித்துக் கைதூக்கிவிட வேண்டியது கால நிலையை அனுசரிக்கும்போது அவசியமாகிறது.

சாதாரணமாக நீரும் நானும் அலட்சிய மனப்பான்மையோடு நோக்கும் விளக்குமாறு உண்மையில் அவ்வளவு கேவலமான பொருள் அல்ல. அத்துடன் ஏற்கனவே அதுவும் இலக்கியத்தில் ஓர் இடம் பெற்றிருக்கிறது. பிரசித்தி பெற்ற ஆங்கில வசன கர்த்தா ஒருவர் விளக்குமாற்றைக் கொண்டு ஒரு வேதாந்தக் கட்டுரை வரைந்திருக்கிறார். அவர் வேதாந்தத்தோடு விநோதத்தையும் கலந்திருக்கிறார். "மனிதனும் விளக்குமாறும் ஒன்று, மனிதனும் சரி, விளக்குமாறும் சரி, பெண்களிடம் அகப்பட்டுக்கொண்டால் உருத் தெரியாமல் போய் விடுவதுதான் முடிவு!" என்று அவர் சொல்கிறார். எவ்வளவு பெரிய உண்மை, பாருங்கள்!



"அவளுடைய தளிர்க் கரங்களில்..."

பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுவதுபோல் பெண்கள் கையில் ஏறும் விளக்குமாறும் நமது கண்ணுக்கு அழகாகவே தோற்றமளிக்கிறது. வெறும் துடைப்பக் குச்சிகளை, நீர் கவியாக இருக்கும் பட்சத்தில் 'பொன் ஊசிகள்' என்று கற்பித்துக் கவிதை இயற்ற ஆரம்பிக்கலாம். காதலுக்கு ஏங்கும் காதலன், "அவளுடைய தளிர்க் கரங்களில் ஏறிப் பெருக்குவதற்கான துடைப்பமாகவாவது நான் பிறந்திருக்கலாகாதா!" என்று பொறாமைப்படும் நிலையில் அல்லவா விளக்குமாறு இருக்கிறது!

விளக்குமாற்றின் பெருமையை விளக்குவதற்கு ஊகுமுள் ஒன்றே போதும். பாம்பு கடி, தேள் கொட்டு இவைகளில் எதை வேண்டுமானாலும் சகிக்கலாம், இந்த ஊகுமுள் நம் சட்டைக்குள் புகுந்துகொண்டு நம்மைக் குத்தி உபத்திரவம் செய்கிறதே, அதைச் சகிக்க யாராலும் முடியாது. நம் முன்னோர்கள் எத்தனையோ அஸ்திரங்கள் கற்று அவைகளைப் போர்க்களத்தில் பிரயோகம் செய்து வந்ததாகப் புராணங்கள் ஓலமிடுகின்றன. ஆனால் அரைடஜன் துடைப்பக் கட்டையாஸ்திரம் மாத்திரம் ஒருவனிடம் இருக்குமானால் அவனை வெற்றி கொள்ள யாராலும் முடியாது என்பதை அவர்கள் ஏனோ அறியவில்லை!

அக்காலத்திய யுத்த நிபுணர்களுக்குத் தெரியாத விளக்குமாற்றின் உபயோகத்தைப் பிற்காலப் பெண்மணிகள் கண்டு பிடித்

இருக்கிறார்கள். ஔவையார் காலத்திலேயே துடைப்பக் கட்டையை ஆயுதமாக உபயோகப்படுத்திய பெண்மணிகள் இருந்தார்களெனத் தெரிகிறது. விளக்குமாற்றைக் கத்தியாகவும், முறத்தைக் கேடயமாகவும் உபயோகித்து, ஔவையாருக்கு ஒரு வாய் கூழ் தரவேண்டுமென்று சொன்ன தன் கணவன்மார்களை விரட்டியடித்த கற்பரசிகள் வாழ்ந்த தமிழ்நாடு இது என்பது ஔவையாரின் பாடல்கள் சிலவற்றிலிருந்து தெரியக் கிடக்கிறது!

துடைப்பக் குச்சிகள் பார்ப்பதற்கு மிருதுவாகவும் பலமற்றவையாகவும் இருந்தாலும், ஒரு துடைப்பக் குச்சி ஓர் ஓடத்தையே கவிழ்க்க உடந்தையாயிருந்தது. அந்த ஓடத்தில் சுமார் பத்துப் பிரயாணிகள் இருந்தனர். அவர்களில் ஒரு குரங்காட்டியும் இருந்தான். அவனுடன் ஒரு துடைப்பக்கட்டை வியாபாரியும் இருந்தான். இவர்கள் பக்கத்திலிருந்த ஒரு பையன் மெள்ள ஒரு துடைப்பக் குச்சியை உருவி, அதைக் கொண்டு குரங்கைக் குத்தினான். குரங்கு வெருண்டு நான்கு பக்கமும் பாய்ந்தது. ஓடத்திலிருந்த ஜனங்கள் ஒரு புறமாகச் சாயவே ஓடம் கவிழ்ந்து போயிற்று. இந்தவிதமாக வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பதற்கிணங்க, அந்தப் பையன் ஒரே ஒரு துடைப்பக் குச்சியை உபயோகித்துப் பத்துப் பேர்களைப் பரலோகத்துக்கு அனுப்பி வைத்து, தானும் அவர்களைப் பின் தொடர்ந்தான்!

துடைப்பக் கட்டைகள் இல்லாவிட்டால் தமிழ்ப் படங்களில் ஹாஸ்யக் கட்டங்களைத் தத்ரூபமாகப் படம் பிடிப்பதெப்படி? ஒருத்தி தன் கணவனுக்கு வெண்சாமரம் வீசுவது போல் காட்டாவிட்டால், அதை ஹாஸ்யக் கட்டம் என்று பொது ஜனங்கள் ஒப்புக் கொள்வார்களா!

பெண்களுக்குத் 'தையலார்' என்ற பெயர் வந்ததே இந்தத் துடைப்பக் குச்சிகளினால்தான். துடைப்ப ஈர்க்கின் உதவியால் சதா இலைகளைத் தைத்துக்கொண்டே இருப்பவர்களைத்தான் 'தையலார்' என்று நம் ஆன்றோர் சொல்லியிருக்க வேண்டும். இப்போது லேஸைப் பின்னிக் கொண்டும், 'ஸ்வெட்டர்' போட்டுக் கொண்டும், கை மிஷினில் தைத்துக் கொண்டும் இருப்பவர்களைத்தான் நாம் தையலார் என்கிறோம்!

ஆங்கிலத்தில் 'புதுத் துடைப்பம் நன்றாகப் பெருக்கும்' என்று ஒரு பழமொழி உண்டு. நம் நாட்டுத் துடைப்பம் ஆரம்ப நாட்களிலும், 'கட்டைத் துடைப்பம்' என்று சொல்லப்படும் அந்திய நாட்களிலும் தவிர, நடுவில்தான் நன்றாகப் பெருக்கும் என்பர். இரண்டு நாட்டுத் துடைப்பங்களும் அளவிலும் உருவிலும் வித்தியாசமாய் இருப்பதனால்தான், இப்படித் துடைப்பக் கட்டை விஷயத்திலகூட ஒற்றுமை இல்லாதவர்களைக் கட்டி ஆண்டு மாரடிப்பதைவிட, இவர்களுடைய சம்பந்தத்தை அடியோடு துடைத்தெறிந்து விட்டுப் போய்விடுவதுதான் நல்லது என்று ஆங்கிலேயர் நிர்மாணித்திருக்க வேண்டும்!

வீட்டில் தேளைக் கண்டதும், "ஆண் பிள்ளைகள் யாராவது இருந்தால் அழைத்து வருகிறேன்!" என்று புருஷன் வாசல் பக்கம் கம்பி நீட்டிவிட்டால், அந்தத் தேளை அடிப்பதற்கு மனைவி கைக்கொள்ளும் ஆயுதம் தோன்றாத் துணையான துடைப்பம் தான். துடைப்பக் கட்டையால் மரணம் அடையும் தேளுக்கு அடுத்த ஜன்மத்தில் பாம்பு ஜன்மமாகப் 'பிரமோஷன்' கிடைக்கும் என்பது ஐதிகம்.

நாய் வேஷம் போட்டால் குலைப்பதற்குச் சங்கோசப்படக் கூடாது என்பதுபோல், துடைப்பம் விற்கிறவன் தன்னை எல்லோரும் "ஏ, துடைப்பம்!" என்று கூப்பிடுவதற்குக் கோபப்படக் கூடாது.

துடைப்பம் தனித்தனியே ஒடியக்கூடிய குச்சிகளைக் கொண்டிருந்தாலும் ஒரு கட்டாய்க் கட்டி இருக்கும்போது, பலம் பொருந்திய ஆயுதமாய் விளங்கி ஒற்றுமையை உலகுக்கு விளக்கிக் காட்டுகிறது.

துடைப்பம் வீட்டின் தோட்டி; அதே சமயத்தில் வீட்டு எஜமானியின் செங்கோலும் கொடுங்கோலும் அஃதே! பாட்டிமார்களால் தங்கள் பேரன் பேத்திகளுடைய திருஷ்டியைப் போக்குவதற்காக அடுப்பில் போடப்பட்டு, தாங்கள் எரிவதால் பாட்டிகள் மனத்தைக் குளிர வைக்கும் தியாக மூர்த்திகளும் அவையே!

துடைப்பம் கலைக்கும், கொலைக்கும் ஆதார வஸ்து; ஆண்டி முதல் அரசன் வரை அசட்டை செய்ய முடியாத அரும் பொருள்; ஆணும் பெண்ணும் பால் பேதமின்றிக் கையாண்டு அழுக்கை அகற்றுவதற்கான கருவி. அத்தகைய விளக்குமாற்றின் பெருமையை நாம் வாயார மனமாரப் போற்றுவோமாக!

# ராஜ விஜயம்

ஜி. எஸ். பி.

**வா**ழ்க்கையில் தொடர்ந்து ஏற்பட்ட ஏமாற்றங்கள் தான் ஜகதீசய்யருக்கு ஜோசியத்தில் நம்பிக்கை ஏற்படும்படி செய்தது. அவருடைய ஜாதகத்தைப் பார்த்த மலையாள நாணு, ஒரு 'வெளிச் சென்னைச் சிரிப்பு'டன், "ஐயருக்கு ராஜயோகம் அடிக்கப் போகிறது!" என்றான்.

முப்பத்திரண்டு பற்களையும் கக்கி விடுவது போல், ஒரு 'ஹிஹிஹி' காட்டி விட்டு, "ராஜயோகமா! எனக்கா!" என்று ஆவலுடன் விசாரித்தார் நம் நண்பர்.

"ராஜயோகமேதான்! ஒரு ராஜாவே உங்கள் வீட்டுக்கு எழுந்தருளி, பண மூட்டை தரப்போகிறார். லக்ஷ்மி கடாக்ஷம் நிறைய இருக்கிறது!" என்று நமது 'நேந்திரப் பழம்' பதிலளித்தது.

அடுத்த க்ஷணம் மலையாள நாணுவின் கையில் பளபள வென்று ஒரு ரூபாய் வந்து விழுந்தது.

வீட்டுக்கு வந்தார் ஐயர். சகதர்மிணியாக வாய்த்திருந்த மீனுவிடம், தான் ஜோசியம் பார்த்த வரலாற்றை விவரித்தார். கணவனுக்குப் பண மூட்டை வரப் போகிறது என்று அறிந்ததும், மீனுவின் முகம் 'வைரக்கம்ம'லென தகதகத்தது. அம்மாள் அது சமயம் ஒரு வைரக் கம்மலை மனதில் நினைத்துக் கொண்டிருந்தாள். அகத்திலிருப்பது முகத்தில் தெரியுமல்லவா?

மார்கழிமாதக் குளிரில்தான் மகாராஜா மூட்டையுடன் வருவார் என்று நாணு 'நிச்சய'மாய் மலையாள பாஷையில் சொல்லியிருந்ததினால், அம் மாதத்தை ஆவலுடன் எதிர்பார்த்து வந்தார் ஜகதீசய்யர்.

கடைசியில் மார்கழி மாதமும் வந்தது. ஆனால் பஜனை கோஷ்டியும், கம்பளித் தொப்பியும் கண்ணில் பட்டதே தவிர, எந்த மகாராஜாவும் அவர் இருந்த திசையிலேகூட எட்டிப் பார்க்கவில்லை. "மகாராஜா வந்தால் கடனை யெல்லாம் ஒரேயடியாகத் தொலைத்து விடலாமென்று பார்த்தால் அவர் வரவே காணுமே!" என்று ஜகதீசய்யர் சொல்லவும், "மலையான ஜோசியன் வார்த்தை பொய்யாகாது. அதிர்ஷ்டம் வரத்தான் போகிறது; கடனும் தொலையத்தான் போகிறது!' என்றாள் மீனாக்ஷி.

அதற்குமேல் ஐயர் வாய் திறக்கவில்லை. ஆனால் மகாராஜாவை எதிர்பார்த்து எதிர்பார்த்து ஜகதீசய்யருக்குச் சலிப்பு ஏற்பட்டது. பல முறை எட்டிப் பார்த்து தின் பலனாகக் கழுத்தைத்தான் வலித்தது.

அன்று அவர் குளிக்கத் தயாராகையில் பையன் விசு ஓடோடியும் வந்தான்.

"அப்பா! உன்னைத் தேடிக் கொண்டு ஒருவர் வந்திருக்கிறார். கையிலே ஒரு பண மூட்டை இருக்கு......!"

எஞ்சினீரிங் காலேஜில் இடம் கிடைத்த மாணுக்கனைப்போல் துள்ளினார் ஐயர்.

"அவர் எப்படி யிருக்கார்!" என்ற கேள்வி அவரை யறியாமலே அவர் வாயினின்றும் பிறந்தது.

"தலையில் தலைப்பாகை கட்டிண்டிருக்கார். நீண்ட கோட்டுப் போட்டுண்டிருக்கார்......" என்று விசு அடுக்குவதற்கு முன்னாலேயே, ஜகதீசய்யர் மகாராஜாவை எதிர்கொண் டழைக்கும் நோக்கத்துடன் வாசலுக்கு ஓடினார்.

திண்ணைக்குப் போனவர் அங்கேயே மூர்ச்சையானார். "ஏய், பாக்கியை தராமல் ஏமாத்தலாம்னு பார்த்தியா?" என்று கேட்டபடி அங்கு தீப்பொறி பறக்கும் கண்களுடன் நின்றான் ஒரு மார்வாடி.



"அப்பா, தம்பி! இங்கிட்டு மழை பெயுது கருக்கக் கொடையை எடுத்துட்டு ஓடி வா நான் இங்கேயே காத்துக்கிட்டு இருக்கேன்

# சரஸ்வதி பூஜை

சரோஜா ராமமூர்த்தி

"சரஸ்வதி பூஜை—செப்டம்பர் மாதம் இருபத்தாறாம் தேதி செவ்வாய்க்கிழமை!" என்று ஹாலில் உட்கார்ந்திருந்த தாத்தா, பஞ்சாங்கத்திலிருந்து இரைந்து படித்தார்.

மாடியிலிருந்து அந்தச் சமயத்தில் கீழே இறங்கி வந்து கொண்டிருந்த சரஸ்வதியின் காதில் அது நன்றாக விழுந்தது.

"தாத்தா! சரஸ்வதி பூஜை செவ்வாய்க்கிழமையில்லையாம்; ஞாயிற்றுக்கிழமை தானாம். அதனால் சர்க்கார் ஆபீஸ்களுக்கு லீவு கிடையாதாம். நேற்று அப்பா சொல்லிக் கொண்டிருந்தாரே, நீ கேட்கவில்லையா?" என்று கேட்டாள் அவள் கீழே இறங்கி வந்து.

தாத்தா மூக்குக் கண்ணாடியைக் கழற்றி உறையில் வைத்துவிட்டு, "ஞாயிற்றுக்கிழமையாவது! எந்தப் பஞ்சாங்கத்திலும் அந்த மாதிரி இல்லையே? ஒரு நாள் முன்னே பின்னே இருக்குமே ஒழிய ஒரேயடியா நாலைந்து நாளா வித்தியாசப்படும்? அதெல்லாம் இருக்காது!" என்றார் தம் பேத்தியைப் பார்த்து.

"அதென்னமோ, கவர்ன்மெண்டுக்கு மட்டும் சரஸ்வதி பூஜை இந்த வருஷம் ஞாயிற்றுக்கிழமைதானாம். மத்திய சர்க்காருக்கு இந்த விஷயங்களில் ஆலோசனை சொல்லுவதற்காக மாதம் மூவாயிரத்து ஐந்நூறு ரூபாய் சம்பளத்தில் சீமையிலிருந்து வந்திருக்கும் சாஸ்திரிகள் அப்படித்தான் சொல்லி விட்டாராம், தெரிகிறதா?" என்று கேட்டுவிட்டு, சரஸ்வதி சமையலறைப் பக்கம் போய் விட்டாள்.

"சாஸ்திரிகளாவது, சீமையிலிருந்து வருகிறதாவது! எனக்கு ஒண்ணும் தெரியாதுன்னு நினைச்சிண்டிருக்குகள், போக்கிரிப் பசங்கள்!" என்று முணுமுணுத்துக் கொண்டார் தாத்தா.

சரஸ்வதி சமையல் அறைக்குள் நுழைந்த போது, அங்கு இன்னும் காப்பிக் கடைதான் நடந்து கொண்டிருந்தது. அவள் சகோதரர்கள் அப்பொழுதுதான் எழுந்து பல் தேய்த்துவிட்டு வந்து உரத்த சத்தத்துடன் பேசிக்கொண்டே காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

"என்ன இரைச்சல், கொத்தவால் சாவடி மாதிரி!" என்று கேட்டுக் கொண்டே வந்த சரஸ்வதி, தன் தாயாரைப் பார்த்து, "அம்மா! சரஸ்வதி பூஜை செவ்வாய்க்கிழமை என்று சொல்லிக் கொண்டிருந்தாயே, தாத்தாவைப் போய்க் கேளு. ஞாயிற்றுக்கிழமைதானாம், சொல்லி விட்டார்!" என்றாள்.

"என்னடி இது!" என்று கேட்டுவிட்டு ஹாலை நோக்கி விடுவிடென்று நடந்தாள் அவள் தயார். சரஸ்வதி உடனே வாயைக் கையினால் பொத்திக் கொண்டு சிரிப்பை அடக்க முயன்றதும், அவள் சகோதரர்களும் சிரித்துக் கொண்டே எழுந்திருந்து, ஹாலில் நடக்கும் வேடிக்கையைப் பார்ப்பதற்காகத் தங்கள் தாயாரைப் பின் தொடர்ந்தார்கள்.

★

இந்த சரஸ்வதிக்கு வயது பதினைந்தோ அல்லது பதினாறோ இருக்கும் என்று நினைக்க வேண்டாம். வருகிற ஐப்பசி மாதத்துக்கு அவளுக்கு இருபத்துமூன்று வயது நிறையப் போகிறது! ஆனால் பார்ப்பதற்குப் பதினெட்டு வயசு மாதிரிதான் இருப்பாள். ரொம்ப ரொம்ப அழகு என்று சொல்ல முடியாது; அழகில்லை என்றும் சொல்வதற்கில்லை. குறும்புத்தனமான சிரிப்பு ஒன்று எப்பொழுதும் அவள் முகத்தில் குடிகொண்டிருக்கும். அவள் பேச்சிலும்கூட சதா குறும்பும் பரிகாசமும்தான்.

அவள் கல்யாண விஷயந்தான் அவள் பெற்றோருக்கும் தாத்தாவுக்கும் கூட, பெரிய கவலையை உண்டு பண்ணுவதாயிருந்தது. சென்னை ராஜதானியில் மட்டும் இல்லாமல் பம்பாய், கல்கத்தா டில்லி முதலிய இடங்களுக்கெல்லாம் உத்தியோகத்துக்காகப் போயிருக்கும் பிரும்மசாரிகளை வரனுக்காகச் சல்லடை போட்டு அரித்துக் கொண்டிருந்தார்கள் அவர்கள். தகுந்த வரன்தான் இன்னும் கிடைத்த பாடில்லை.

"ஏ, பெண்ணே! இங்கே வா!" என்று கூப்பிடுவார் தாத்தா. சரஸ்வதி சிரித்துக் கொண்டே எதிரில் வந்து நிற்பாள்.

"இந்த வருஷமாவது கல்யாணம் பண்ணிக் கொள்கிறதாய் உனக்கு உத்தேசம் ண்டா, இல்லையா?"

"எந்த நிமிஷமும் தயாராக இருக்கிறேன்!" என்பாள் சரஸ்வதி குறும்புச் சிரிப்புடன்.

"நீ தயார்தான்! வேளைதானே வரவில்லை!" என்று முணுமுணுப்பார் தாத்தா.

பாவம், சரஸ்வதிக்கும் மனசிலே குறை தான், தனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையே என்று. அவளுடைய குறும்புத் தனமான பேச்சும் சிரிப்பும் அந்தக் குறை வெளியே தோன்றாதபடி செய்து வந்தன.

ஒரு நாள் மாலை ஏழு மணி இருக்கும். வீட்டில் விளக்கேற்றின பின் சரஸ்வதி பாடங்களைப் படிப்பதற்காக மாடியில் இருந்த தன் அறைக்குச் சென்று புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள். அப்பொழுது, "சரஸ்ஸு!" என்று கூப்பிட்டுக் கொண்டே வந்தார் அவள் தாத்தா.

சரஸ்வதி திரும்பிப் பார்த்தபொழுது அவர் சந்தோஷப்படி வருகிறதே என்று, "சரஸ்ஸு! மதுரையில் ஒரு வரன் இருக்கிறது என்று சொன்னேனே, அந்தப் பையனைப் பற்றி விசாரித்து எழுதும்படி கல்யாணராமனுக்கு எழுதியிருந்தேன். அவனிடமிருந்து பதில் வந்திருக்கிறது. பார்!" என்று கூறி, ஒரு கடிதத்தை அவளிடம் கொடுத்து விட்டு வெளியே சென்றார்.

கடிதத்தைக் கையில் வாங்கிய பொழுது சரஸ்வதியின் முகம் வெட்கத்தினாலும் கோபத்தினாலும் சிவந்தது. கல்யாணராமன் என்பவன் அவர்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் வெகு காலமாக வசித்த ஸப் ரிஜிஸ்ட்ராரின் பிள்ளை. மூன்று வருஷங்களுக்கு முன்பு அவன் லா காலேஜில் படித்துக் கொண்டிருந்தான். சரஸ்வதியின் குடும்பத்துக்கும் அவன் குடும்பத்துக்கும் மிக நெருங்கிய பரிச்சயம் உண்டு. சரஸ்வதியைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை அவன் மனசில் இருந்தது. சரஸ்வதிக்கும் இந்த விருப்பம் இல்லாமற் போகவில்லை. கல்யாணப் பேச்சுகளும் நடந்தன. சரஸ்வதி அப்பொழுது தான் இண்டர்மீடியட் பரீக்ஷையில் தேறி இருந்தாள். மேலே பி.ஏ. படிக்க அவள் உத்தேசித்திருந்தபடி



யால் இரண்டு வருஷங்கள் கழித்துக் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போவதாக அவன் கூறிவிட்டான். கல்யாணராமன் தனக்காக இரண்டு வருஷம் காத்திருக்க மாட்டானா என்றுதான் எதிர்பார்த்தாள் அவள். அது கல்யாணராமன் மட்டும் சம்பந்தப்பட்ட விஷயமாக இருந்தால், இரண்டு வருஷம் மட்டும் அல்ல, ஐந்து வருஷமானாலும் காத்துக்கொண்டிருக்க அவன் தயார்தான். ஆனால் அவன் பெற்றோர்கள் அதற்குத் தயாராக இருந்ததாகத் தெரியவில்லை. வேறு இடத்தில் பெண் பார்க்க அவர்கள் முனைந்து விட்டார்கள். அந்தச் சமயம் கல்யாணராமன் பரீக்ஷையில் தேறினபடியால் வக்கீல் தொழில் நடத்துவதற்காக அவர்கள் குடும்பத்துடன் மதுரைக்குப் போக வேண்டியதாயிற்று.

இன்று மறுபடி அந்தக் கல்யாணராமனிடமிருந்து தாத்தாவுக்குக் கடிதம் வந்திருக்கிறது என்று தெரிந்ததும், சரஸ்வதிக்கு உண்டான கோபத்துக்கு அளவில்லை. "இரண்டு வருஷம் ஒரு பெண்ணுக்காகக் காத்திருக்க முடியாத ஆண்பிள்ளை ஒரு மனுஷனா!" என்று நினைத்துக் கொண்டு, அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பாராமலே கிழித்துத் தன் மேஜை அடியில் இருந்த குப்பைக் கூடைக்குள் போட்டு விட்டாள்!

★

சரஸ்வதி பூஜை வந்து விட்டது.

ஆமாம்; தாத்தா பஞ்சாங்கத்தைப் பார்த்து ஜோஸியம் சொன்னபடியே, அது செப்டம்பர் மாதம் இருபத்தாறும் தேதி செவ்வாய்க் கிழமையன்று தவறாமல் வந்து விட்டது.

சரஸ்வதியின் வீட்டைப் பொறுத்த வரையில் சரஸ்வதி பூஜை தனியாக வரவில்லை. மதுரையில் இருந்த கல்யாணராமனையும் அது தன்னுடனே அழைத்துக் கொண்டு 'ஜாம் ஜாம்' என்று வந்தது.

பொழுது விடிந்ததும், சரஸ்வதி படுக்கையை விட்டு எழுந்து மாடியிலிருந்து கீழே இறங்கி வரத் தொடங்கினாள். அப்பொழுது ஹாலின் நடுவில் இருந்த பெட்டியும் படுக்கையும் அவள் கண்ணில் பட்டதும் அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அடுத்த நிமிஷம் கல்யாணராமனே அவள் எதிரில் நின்றான்! மரியாதைக்காக அவனிடம், "எப்போது வந்தீர்கள்?" என்று கேட்டுவிட்டு விழுந்தடித்துக் கொண்டு கொல்லைப் பக்கம் சென்றாள் சரஸ்வதி. தனக்காக இரண்டு வருஷம் காத்திருக்க முடியாதவனுடன் அதற்கு மேல் என்ன பேச வேண்டியிருக்கிறது என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

என்ன காரணத்தினாலோ அன்று ஒரே ஆனந்தத்தில் மூழ்கியிருந்தார் தாத்தா. தம் பேத்தியின் போக்கு அவருக்கு அர்த்தமாகவில்லை. "அதிகம் படித்து விட்டாலே இந்தப் பெண்கள் அசடுகளாகி விடுகிறார்கள்! காலையில் இரண்டு வார்த்தைகள் பேசிவிட்டு மாடிக்குப் போனவள், அப்புறம் கீழே வந்து 'என்ன?' என்றுகூடக் கேட்கவில்லையே, வந்தவனை?" என்று நினைத்துக் கொண்டார் அவர்.

மத்தியானம் மூன்று மணி இருக்கும். கல்யாணராமனும் சரஸ்வதியும் மாடியில் சந்தித்தார்கள்.

"என் பேரில் உனக்கு என்னவோ கோபம் போலிருக்கிறது. இல்லாவிட்டால் இப்படி நாலு வார்த்தைகள்கூடப் பேசாமல் இருப்பாயா நீ?" என்றான் கல்யாணராமன்.

"கோபமாவது, ஒன்றாவது! உங்களுடன் எனக்கு என்ன பேச்சு வைத்திருக்கிறது என்றுதான் சும்மா இருக்கிறேன்!"

"நான் எழுதிய கடிதத்தைப் பார்த்தாயா? தாத்தா உனக்கு அதைக் காண்பித்ததாகச் சொன்னாரே!"

"கண்ட கடிதாசியைப் படித்துப் பொழுது போக்க நான் என்ன வேலையில்லாமல் ஒழிந்து இருக்கிறேனா? மதுரையில் இருக்கும் வரன் எதையோ பற்றி எழுதியிருப்பீர்கள்! அது இருக்கட்டும். உங்கள் மனைவி சௌக்கியந்தானே? குழந்தைகள் ஏதாவது ..." என்று இழுத்தாள் சரஸ்வதி.

கல்யாணராமன் பெரிதாகச் சிரித்தான்.

"உன்னைப் போல அசடை நான் பார்த்ததில்லை! மனைவியாவது குழந்தைகளாவது? எனக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லையே! உனக்காக இரண்டு வருஷம் காத்திருந்து உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளத்தானே இவ்வளவு தூரம் வந்திருக்கிறேன்? அந்தக் கடிதத்திலும் இதையெல்லாம் எழுதியிருந்தேனே!" என்றான் கல்யாணராமன்.

சரஸ்வதி பதில் ஒன்றும் பேசவில்லை. கீழே குனிந்து, மேஜை அடியில் கிடந்த குப்பைக் கூடையில் தான் கிழித்துப் போட்ட கடிதத் துண்டுகளை எடுத்து ஒன்று சேர்த்துப் படிப்பதில் முனைந்தாள்!

*கமலா:
பளபளப்பான கூந்தல்
மாசுமறுவற்ற
வதனம் . . .




## என்னே அவளது எழில்!
## அவள் பாண்ட்ஸ்
## உபயோகிக்கிறாள்!

உலகெங்குமே யுவகாரியர்களும் சிறுமியர்களும் ஒளிந்து கிடக்கும் தங்களுடைய எழிலை பகிரங்கமாக சோபிக்கச் செய்ய புது முறைகள் கண்டு பிடிக்கின்றனர்.

. . . சரும சௌந்தரியமே இலக்ஷணமொத்த தேகாங்கங்களின் எழிலை எடுத்துக் காட்டுவது. பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமிலுள்ள இயற்கைத் தைலங்களின் உதவியால் சருமத்தை மிருதுவும், மழ மழப்புமாக வைத்துக் கொள்ளுங்கள்.

# பாண்ட்ஸ் க்ரீம்ஸ்




**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:** தினம் இரண்டு வேளை விரல் நுனிகளால் கோல்ட் க்ரீம் மெதுவாகத் தடவி, முகத்தை செம்மையாகச் சுத்தம் செய்யுங்கள். பாண்ட்ஸ் டிஷ்யூவால் துடைத்துக் களையவும்.




**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்:** பின்பு வானிஷிங் க்ரீம் தடவுங்கள். அது சருமத்தினுள் மறைந்து-சருமத்திற்கு பாதுகாப்பளிக்கிறது.




**பாண்ட்ஸ் பௌடர்:** பின்னர் வேண்டுமானால் கொஞ்சம் பௌடரும் தடவிக் கொள்ளுங்கள். முகம் பூவிதழ்போன்ற மோகன காந்தியுடன் விளங்கும்.

வியாபார விவரங்களுக்கு:
எல். டி. ஸேய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய்-கல்கத்தா-காராச்சி-சென்னை.

# நமது உணவுகளை நிறுத்துப் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா?

உணவுகளை எந்தெந்த அளவில் சாப்பிட வேண்டும் என்பது நமக்கும் தெரிந்ததுதான். புரோடீன், விட்டமின், உலோகச்சத்து, கொழுப்பு, கார்போஹைட்ரேட்ஸ் முதலியன அவசியமான சத்துக்களாகும். ஆனால் நாம் தினசரி சாப்பிடும் உணவு எப்படி இருக்கின்றது?

போஷிப்பை தரும் விட்டமின்களும் சில உப்பு வகைகளும் உணவில் குறைந்துதான் இருக்கும். இவைகளை பல விட்டமின் சத்துள்ள மெக்லெக் வில்லைகளைச் சாப்பிட்டு சரி செய்யலாம்.

மெக்லெக் வில்லைகள் சத்துப் பொருள்கள் நிறைந்துள்ளதால் இந்த குறைகளை நீக்கிவிடுகிறது. ஆகையால் நீங்கள் எந்த விதமான உணவுகளைச் சாப்பிட்டாலும் மெக்லெக் உணவு சத்துக்களை சாப்பிட்டு குறைகளை நிவர்த்திக்கலாம்.



**மெக்லெக்**
**நியூட்ரிமெண்ட்ஸ்**

உணவில் குறையாய் உள்ள உணவுச்சத்துக்களை அளிப்பவை

விபரங்களுக்கு கீழ்க்கண்டவர்களுக்கு எழுதுங்கள்:

**ஸ்ரீ மெக்லெக் நியூட்ரிமெண்ட்ஸ் அண்ட் பார்மஸூடிகல்ஸ் லிமிடெட்**

99-A, ஆர்மீனியன் தெரு, ஜி. டி. மதராஸ்

MNP. 44 Tamil

No. 4






# ஒரு வர்த்தக முத்திரையைப் பார்க்கிலும் அதிகம்

ஒரு துணியின் இழை நேர்மை, தோற்றத்தினின்று அது என்ன ரகம் என்பது நெசவுத் தொழில் நிபுணர்களால் பகுத்தறிய முடியலாம். ஆனால் ஒரு துணிமீது கேவலம் இந்த ஆடு மார்க்கு மட்டும் அச்சிடப்பட்டிருப்பதே அதன் குணத்திற்கும், பெருமதிக்கும் தங்களுடைய உத்தரவாதமென எங்களுடைய எண்ணிறந்த வாடிக்கைக் காரர்கள் சொந்த அனுபவத்தினின்று அறிவர் .... உன்னதில் மிகச் சிறந்த ரகம், மிகத் தாழ்ந்த விலை...விலைவாசிகள் வானளாவும் இப்பஞ்ச காலத்தில் இவ்விரண்டும் ஒருங்கே சேர்ந்தமைவது அரிதெனவே கூறவேண்டும்.

இந்த மார்க்குடைய நெசவுத் தரங்களையே அதிகம் விரும்புவதில் அவர்களுடைய பகுத்தறிவை — அல்லது உங்களுடையதை — எந்த நிபுணராலும் மிஞ்ச முடியாது.

கம்பளி : பூராவும் கம்பளி ஸூப்பர் ப்லாங்கெட்டுகளும் பிரயாண ரக்குகளும்—ட்வீடுகளும், நேரிய கம்பளி தினுசுகளும், யூனியன் ஷர்ட்டிங்குகளும்.

பருத்தி : ஸெல்லா ஷர்ட்டிங்குகளும், நேரிய லாங்கிலாத்தும்—கோல்ட் ஸ்டாண்டர்ட் ஷர்ட்டிங்குகள்—லேடி லாங்கிலாத்தும், சாயம் தோய்த்ததும்—ஸ்ம்ரா ஸூட்டிங்குகள்—டஸ்ஸோர்கள்—ட்ரில்கள்—ட்வில்கள் வகையறா.

பட்டு : 44"/45" அகலம், பற்பல சாயல்களில்.



*தயாரிப்போர்கள்:* தி பங்களூர் ஊலன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கோ., லிட்.

ஏஜெண்டுகள், காரியதரிசிகள், ட்ரெஷரர்கள்

பின்னி & கோ.

(சென்னை) லிட்.

"ஆடு மார்க்கு" — கனிவுத்தற்குக்க துணிகளின் உத்தரி.



# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

ரமாநாத் உலாவிவிட்டு ஒன்பது மணி சமாருக்கு வீடு திரும்பினான். பத்மா சமையல் வேலையில் ஈடுபட்டிருந்தாள். ரமாநாதைப் பார்த்ததும், "ரத்தன் வந்திருந்தாள்; பணத்தை அவளிடம் கொடுத்துத் தொலைத்து விட்டேன்!" என்று அவள் மகிழ்ச்சியுடன் சொன்னாள்.

ரமாநாத்துக்குத் தலை சுழன்றது; கண்களை எங்கேயோ கொண்டு போய்ச் செருகுவது போலிருந்தது. அவன் பதட்டத்துடன், "என்ன சொன்னாய்! பணத்தைக் கொடுத்து விட்டாயா? உன்னிடம் அவளுக்குப் பணம் கொடுக்கச் சொன்னது யார்?" என்று கேட்டான்.

"அவளுடைய பணத்தைத்தானே கொண்டு வந்து வைத்திருப்பதாக நீங்கள் சொன்னீர்கள்? நீங்களும் அவளுக்காக ரொம்ப நேரம் காத்திருந்தீர்களே! 'அவளுடைய பணத்தைத் திருப்பிக் கொடுக்கத்தானாக்கும்!' என்று நான் எண்ணிவிட்டேன். நீங்கள் அந்தண்டை போனதும் அவள் வந்து 'கங்கணத்தைக் கொண்டு வா' என்று நச்சரிக்க ஆரம்பித்து விட்டாள். அவளுடைய நச்சரிப்புத் தாங்காமல் நான் பணத்தை எடுத்து அவள் கையில் கொடுத்து விட்டேன்!" என்றாள் பத்மா.

ரமாநாத் சிறிது சிறிதாகச் சுய உணர்வு பெற்று, "ஆமாம், அவள் உன்னிடம் பணத்தைக் கேட்டாளா, அதற்கு?" என்று கேட்டான்.

"கேட்காமல் என்ன? கேட்டதனால் தான் எடுத்துக் கொடுத்தேன். ஆனால் அவள் பணத்தைப் பார்த்ததும், 'வேண்டாம், நீயே வைத்திரு' என்றுதான் சொன்னாள். நான்தான், 'உன்னைப் போன்ற சந்தேகப் பிராணிகளின் பணத்தை யெல்லாம் வாங்கி வைத்துக் கொள்வதே தப்பு' என்று முகத்தில் அடித்தாற் போலப் பதில் சொல்லி விட்டேன்!" என்றாள் பத்மா.

"இனிமேல் இந்த மாதிரிக் காரியம் எல்லாம் என்னைக் கேட்காமல் செய்யாதே!" என்றான் ரமாநாத்.

"இப்பொழுதும் ஒன்றும் குடி முழுகிப் போய் விடவில்லை. வேண்டுமானால் அவளிடம் போய்ப் பணத்தைக் கேட்டு வாங்கி வைத்துக்கொள்ளுங்கள். எனக்கென்ன இப்பொழுதே பிடித்து, 'அந்த வீண் தொல்லையை நாம் விலைக்கு வாங்கி வைத்துக் கொள்ளுவானேன்? என்று எண்ணித்தான் நான் அவளுடைய பணத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டேன்!" என்றாள் பத்மா.

'பத்மாவைக் கோபிப்பதில் பிரயோஜனம் இல்லை' என்று எண்ணி ரமாநாத் முகத்தில் வருத்தம் தாண்டவமாட வெளியே வந்து தன் நிலைமையைப் பற்றி ஆற அமர யோசிக்கலானான். 'இந்தப் பணம் ரத்தனுடையது' என்று அவன் சொன்னதனால் தானே பத்மா அதை எடுத்துக் கொடுத்து விட்டாள்! 'என்னிடம் ஒரு வார்த்தை கேட்காமல் பணத்தை எடுத்து ரத்தனிடம் கொடுக்காதே' என்று அவன் சொல்லியிருந்தால் அவள் அதை எடுத்துக் கொடுத்திருப்பாளா? அவள் மீது கொஞ்ச

கூடக் குற்றமேயில்லை. அவன் பத்மா மீது கோபம் கொண்டால் அது அநியாயம் தானே!

'இந்தச் சமயம் எரிந்து விழுவதனாலோ, கோபித்துக் கொள்ளுவதனாலோ நம் காரியம் கைகூடப் போவதில்லை. ஆற அமர யோசித்து ரத்தனிடமிருந்து எப்படியாவது பணத்தைக் கழற்ற வேண்டும். அவன் வந்தபொழுது நாம் மட்டும் வீட்டில் இருந்திருந்தால் இந்தத் தொல்லைகள் எல்லாம் ஏற்படாமல் வெகு அழகாகச் சமாளித்திருக்கலாமே! இன்றைக்கென்று எனக்கு ஏன்தான் உலாவப் போகவேண்டும் என்று தோன்றிற்றோ! ஒருநாள் உலாவப் போகாமல் இருந்திருந்தால் குடியா முழுகிப் போகும்? இந்த மாதிரிக் கஷ்டங்கள் எல்லாம் அனுபவிக்க வேண்டும் என்று என் தலையில் எழுதியிருக்கும்பொழுது, அதை யாரால் தடுக்க முடியும்? நான் பத்து நிமிஷம் வெளியில் போய்விட்டதனால் தானே இவ்வளவு அனர்த்தமும் வந்தது! ரத்தன் 'பணத்தை நீயே வைத்துக் கொள்' என்று சொன்னபொழுது, பத்மா கொஞ்சம் யோசனையுடன் நடந்து கொண்டிருந்தால் இந்த மாதிரிச் சந்தர்ப்பமே வந்திருக்காதோ, இல்லையோ? நடந்து போன விஷயங்களைப்பற்றி இனி யோசித்து என்ன பயன்? 'ரத்தனிடமிருந்து பணத்தை எப்படித் திருப்பி வாங்குவது?' என்பதே இப்பொழுது நம் முன் நிற்கும் பிரச்னை! 'பணத்தைத் திருப்பிக் கொடுத்ததில் உங்களுக்குக் கோபமாமே! உண்மையைக் கேட்கப் போனால் பணத்தை நான் உங்களிடம் கொடுத்துவிட வேண்டும் என்ற எண்ணத்துடன் வாங்கி வரவில்லை. கடைக்காரன் பயந்துகொண்டு சற்றுச் சீக்கிரமாகவே கங்கணம் செய்து தந்துவிட மாட்டானோ என்ற எண்ணத்தில்தான் அவனிடமிருந்து வாங்கி வந்தேன். நீங்கள் வித்தியாசமாக எடுத்துக் கொள்ளக் கூடாது' என்று அவன் வீட்டுக்கு இப்பொழுதே போய்ச் சொன்னால், அவன் தன் செய்கைக்காக வருந்திப் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட மாட்டானா?'

இப்படியெல்லாம் எண்ணிக் கொண்டே அவன் கடிகாரத்தைப் பார்த்தான். மணி எட்டரைதான் ஆகியிருந்தது. 'இந்த இருட்டு வேளையில் ரத்தன் எங்கும் போக மாட்டான்' என்ற எண்ணத்தில் ரமாநாத் சைக்கிளை எடுத்துக் கொண்டு, அவனைப் போய்ப் பார்ப்பதற்காகப் புறப்பட்டான்.

அன்று ரத்தனுடைய வீட்டில் ஒரே கும்மாளமாக இருந்தது. ஏகப்பட்ட குழந்தைகள் கூடியிருந்தன. மாமரம் ஒன்றில் ஊஞ்சல் போட்டிருந்தது. கிளைகளில் விதவிதமான சிறுமுனை மின்சார விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. தோட்டம் பார்ப்பதற்கு வெகு ரமணீயமாயிருந்தது. குழந்தைகள் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தன; ரத்தன் ஊஞ்சலை வீசி வீசி ஆட்டிக் கொண்டிருந்தான். குழந்தைகளின் சந்தோஷ ஆரவாரம் தோட்டம் எங்கும் எதிரொலித்துக் கொண்டிருந்தது. வக்கீல் ஒரு கம்பளி 'ஓவர் கோட்'டைப் போட்டுக் கொண்டு, வாசல் வராந்தாவில் உட்கார்ந்து வேடிக்கை பார்த்த வண்ணம் சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தார். 'ஊஞ்சல் அருகில் சென்று ரத்தனுடன் பேசலாம்' என்று ரமாநாத் நினைத்தான். ஆனால் வராந்தாவில் வக்கீல் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும், ரத்தனிடம் போக அவனுக்குச் சற்றுச் சங்கோசமாயிருந்தது. வக்கீல் அவனைப் பார்த்ததும் கைநீட்டி வரவேற்று, "வாருங்கள், ரமாபாபு! என்ன சேதி? சௌக்கியமா? உங்கள் முனிசிபல் போர்டில் ஏதாவது விசேஷம் உண்டா!" என்று கேட்டார்.

"அப்படியொன்றும் விசேஷமில்லை" என்று சொல்லியவாறே ரமாநாத் பக்கத்தில் இருந்த நாற்காலி ஒன்றில் உட்கார்ந்தான்.

"ஆமாம், உங்கள் போர்டில் 'பெண்கள் கட்டாயக் கல்வி'த் தீர்மானம் எப்பொழுது நிறைவேறப் போகிறதாம்? மற்ற போர்டுகள் நிறைவேற்றி விட்டாற்போலிருக்கிறதே! என்னைக் கேட்டால் பெண்களுக்குக் கட்டாயக் கல்வி அளிக்க வேண்டியது மிகமிக அவசியம் என்பேன். இல்லாவிட்டால் நம் நாட்டுக்கு எத்தனை ஆயிரம் வருஷமானாலும் முன்னேற்றமே கிடையாது. நீங்கள் ஐரோப்பாவுக்குப் போயிருக்க மாட்டீர்கள். அப்பப்பா! அங்கே பெண்களுக்கு என்னென்ன சௌகரியங்கள், சுதந்திரங்கள், சொத்துரிமைகள் எல்லாம் அளிக்கப்பட்டிருக்கின்றன, தெரியுமா? இவையெல்லாம் பெண் கல்வியினால் ஏற்பட்ட சௌகரியங்களாகும்!" என்றார் வக்கீல்.

ரமாநாத் தான் படித்திருந்த சில பத்திரிகைச் செய்திகளை ஆதாரமாக வைத்துக் கொண்டு, "ஆமாம், அங்கே பெண்களின் நடத்தை சரியில்லையாமே!" என்றான்.

"நான்ஸென்ஸ்! உங்களுக்கு அப்படியெல்லாம் யார் சொன்னது? அந்தந்த தேசத்துப் பழக்கவழக்கம் அப்படி. நம் நாட்டில் ஒரு வாலிபனும் ஒரு யுவதியும் சேர்ந்து உலாவப் போனால், அது நமக்கு ஆச்சரியத்தை விளைவிக்கிறது. அவர்களைப் பற்றி இல்லாதது பொல்லாததெல்லாம் சொல்லிக் கதை கட்டி விடுகிறோம். நம் மனது அவ்வளவு தூரம் அழுக்கேறிவிட்டது என்றுதான் அதற்கு அர்த்தம். ஆணும் பெண்ணும் சமதையாகப் பழகினால்தான் அவர்களுக்குள் ஒரு அன்பு, அனுதாபம் இவைகள் ஏற்படும் என்பதை நாம் அறவே மறந்துவிடுகிறோம். அப்படி நெருங்கிப் பழகும்பொழுது அவர்களிடத்தில் காமம் என்பது தலை காட்டுவதேயில்லை. பெண்களுக்கு நாம் எவ்வளவு சுதந்திரம் அளிக்கிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு தேசம் முன்னேற்ற மடைகிறது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. நம் நாட்டில் பெண்களை சிறையில் போடுவதுபோல வீட்டுக்குள் அடைத்து வைப்பதையும், ஆண்களின் வாசனையே வீசக் கூடாது என்று ஒதுக்கி வைப்பதையும் பார்த்தால், ஆண்களாகிற நம்முடைய மனம்தான் சரியில்லை என்று சொல்லத் தோன்றுகிறது. வாலிபர்களுக்குப் பெண்களுடன் நட்புரிமை பூண்டு வாழ்வதற்குத்தான் அரசியல், தருமம், லலித கலைகள், இலக்கியம், தத்துவ ஆராய்ச்சி, சரித்திரம், விஞ்ஞானம் என்று எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றனவே? அப்படியிருக்கும்பொழுது இந்தக் காமத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பானேன்? மக்கள் குறுகிய மனப்பான்மையுடையவர்களாக இருக்கும் நாட்டில்தான் இந்தக் காம வெறி தலைவிரித்தாடுகிறது. நான் ஒரு வருஷத்துக்கு மேலாக ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் இருந்திருக்கிறேன். எத்தனையோ பெண்களுடன் நட்புரிமை பூண்டு பழகும் சந்தர்ப்பம் எனக்குக் கிட்டியிருக்கிறது. அவர்களுடன் விளையாடியிருக்கிறேன். ஏன், 'டான்ஸ்' முதற்கொண்டு செய்திருக்கிறேன்! ஆனால், அவர்கள் வெட்கித் தலை குனியும்படியாக நான் ஒரு வார்த்தைகூடப் பேசினதில்லை. அப்படிப் பார்க்கப்போனால் நல்லவர்கள்—



கெட்டவர்கள் எந்த நாட்டில்தான் இல்லை?" என்றார் வக்கீல்.

ரமாகாந்துக்கு வக்கீலின் பேச்சில் சுவாரஸ்யமே தட்டவில்லை. அவன் வேறு யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

வக்கீல் மறுபடியும், "நான் சொல்லுவது என்னவென்றால், ஆண்—பெண்களின் மனவளர்ச்சிக்கு நாம் குந்தகம் விளைவிக்கவே கூடாது. அப்படிக் குந்தகம் விளைவித்தால் நம் சமூகம் அடியோடு வீழ்ந்தே விடும்; முன்னேறவே முடியாது. கட்டுப்பாடு என்ற நிலையினால் சமூகத்தைக் கட்டிப் போடவே கூடாது. என்னைக் கேட்டால், நம் நாட்டில் விதவா விவாகத்தைப் பற்றி நன்றாகப் பிரசாரம் செய்ய வேண்டும் என்பேன். நம் நாட்டில் [illegible] வயதானவன் ஒருவன் ஒரு யுவதியைக் கல்யாணம் செய்து கொண்டு விட்டால் பத்திரிகைகள் ஏன்தான் இப்படிக் கூக்குரல் இடுகின்றனவோ, எனக்குப் புரியவில்லை. ஐரோப்பாவில் எண்பது வயதுக் கிழவன் ஒரு யுவதியை மணந்து கொள்ளுகிறான்; எழுபது வயதுக் கிழவி ஒரு வாலிபனை மணந்து கொள்ளு



கிறான். இதுமாதிரியெல்லாம் சர்வசகஜமாக அங்கே நடந்து வருகிறது. இதைப் பற்றிப் பேசுபவர் அங்கு யாரும் இல்லை. நம் நாட்டில் மனிதன் கிழவனாகி விட்டால், 'இந்தக் கிழம் உயிருடன் இருந்துகொண்டு ஏன் தான் இப்படிக் கழுத்தை அறுக்கிறதோ? இது அரை நாழிகை முன்னால் செத்துத் தொலையக் கூடாதோ?' என்கிறோம். பார்க்கப் போனால் மனிதனுக்கு வாழ்க்கைத் துணை தள்ளாத காலத்தில்தானே வேண்டியிருக்கிறது! மனிதன் தள்ளாத காலத்தில்தானே பிறர் கையை எதிர் பார்க்க வேண்டியிருக்கிறது!" என்றார்.

ரமாகாந்தின் கவனம் அவருடைய பேச்சிலேயே செல்லவில்லை. ரத்தனிடம் போய் எப்படியாவது இரண்டு வார்த்தை பேசிவிட வேண்டும் என்பது அவனுடைய அந்தரங்க எண்ணம். ஆனால் அங்கிருந்து எழுந்து போவது அவனுக்கு அவ்வளவு உசிதமாகப் படவில்லை. ஆகையால் அவன் ஒரு நிமிஷ நேரம் ஊஞ்சலையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, "இவ்வளவு குழந்தைகள் எங்கிருந்து வந்தார்கள்?" என்று கேட்டான்.

"ரத்தனுக்குக் குழந்தைகள் என்றாலே உயிர். எப்படியோ அவன் கூட்டம் கூட்டி விடுகிறான். உங்களுக்கும் குழந்தைகளிடம் பிரியம் உண்டு என்றால் போங்களேன்!" என்றார் வக்கீல்.

ரமாகாந்தின் விருப்பமும் அதுதானே! வக்கீலின் அனுமதி கிடைத்ததும், அவன் சட்டென்று எழுந்து ஊஞ்சலுக் கருகில் போனான். ரத்தன் அவனைப் பார்த்ததும் புன் முறுவலுடன், "இதுகள் என்ன பாடு படுத்துகிறதுகள், தெரியுமா? எவ்வளவு வேகமாக வீசி ஆட்டினாலும் இவைகளுக்குப் போதவில்லையாம். 'இன்னும் வீசி ஆட்டு, வீசி ஆட்டு!' என்று பிடுங்கித் தின்கிறதுகள்! எனக்குக் கையைக் கடுத்து விட்டது, நீங்கள்தான் சிறிது நேரம் ஆட்டுங்களேன்!" என்று சொல்லிவிட்டுப் பக்கத்தில் இருந்த மேடையில் உட்கார்ந்து விட்டான்.

ரமாகாந்த் ஊஞ்சல் ஆட்ட ஆரம்பித்தான். குழந்தைகள், "என்னை, மாமா! என்னை, மாமா!" என்று அவனைப் பிடுங்கித் தின்ன ஆரம்பித்துவிட்டன. எல்லாக் குழந்தைகளையும் திருப்தி செய்வதற்குள் அவனுக்குப் போதும் போதும் என்றாகி விட்டது. அவன் வந்த வேலையோ வேறு. அசட்டுத் தனமாக மாட்டிக் கொண்டு விட்டான். என்ன செய்வான், பாவம்!

கடைசியில் அரை மணி நேரம் அவன் ஊஞ்சலாட்டிக் களைத்துப் போய்த் தன் கைக் கடிகாரத்தைப் பார்த்தான். மணியோ ஒன்பதரைக்கு மேல் ஆகிவிட்டது. அவன் தான் வந்திருக்கும் விஷயத்தைப் பற்றி எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்று தெரியாமல் விழித்தான். அதற்குள் ரத்தன் ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டு ஆட ஆரம்பித்து விட்டான்.

ரத்தனுக்கும் ஊஞ்சல் ஆடும் மும்முரத்தில் 'அவன் எதற்காக வந்திருக்கிறான்' என்பதைக் கேட்க வேண்டும் என்று தோன்றவில்லை. ரமாகாந்தும் எப்படி விஷயத்தை ஆரம்பிப்பது என்று புரியாமல் விழித்தான். அதற்குள் மணி பத்து அடித்துவிடவே ரத்தனிடம் விடை பெற்றுக்கொண்டு ரமாகாந்த் வீட்டுக்குப் புறப்பட்டான்.

கொஞ்ச தூரம் சென்றதும் அவனுக்கு 'நாம் இப்படிச் சங்கோசப்பட்டுக் கொண்டு ரத்தனிடமிருந்து பணத்தை வாங்கிக் கொண்டுவராமல் வந்துவிட்டோமே! நாளைக்குப் பணமில்லாமல் எப்படி ஆபீஸுக்குச் செல்வது? போதும் போதாக்குறைக்கு அதில் எண்ணூறு ரூபாய் அல்லவா இருந்தது? பத்மா தனக்கு வந்த ஆத்திரத்தில் பணத்தை எண்ணிக் கூடப் பார்க்காமல் ரத்தனிடம் தூக்கிக் கொடுத்து விட்டாளே! அவனும் பத்மாவைப் போலவே பணத்தை எண்ணிக் கிண்ணிப் பாராமல் யாரிடமாவது எடுத்துக் கொடுத்து விட்டால் அனர்த்தமாக அல்லவா போய்விடும்! இப்பொழுதே திரும்பிப் போய் அவனிடமிருந்து பணத்தை வாங்கிக் கொண்டு வந்து விடலாமா?' என்ற யோசனை பிறந்தது. ஆனால் அடுத்த கணமே, 'ரொம்ப நேரம் ஆகிவிட்டது. இனிமேல் போனால் நன்றாயிராது. நாளைக்கே போவோம்' என்ற முடிவுக்கு அவன் வந்து விட்டான்.

'ஆமாம், இருநூறு ரூபாய் கிடைத்து விடுகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். பாக்கி அறுநூறு ரூபாய்க்கு என்ன செய்வது? நாளைக் காலைக்குள் அறுநூறு ரூபாய்க்கு ஒரு வழி செய்ய முடியவில்லையென்றால் என்ன ஆகும்?' என்ற எண்ணம் எழுந்ததும், அவன் வியர்த்து வெலவெலத்து விட்டான்.

இருள் அடர்ந்த ஏமாற்றத்துக்கிடையே, நம்பிக்கை ஒளி வீசும் அநேக சந்தர்ப்பங்கள் வாழ்க்கையில் ஏற்படுகின்றன. 'இன்னும் ஒரு தடவை கன்னுவைப் போய்ப்

பார்த்தால் என்ன? ஒருவேளை மனம் இளகி அவன் சம்மதிக்கமாட்டானா?' என்ற எண்ணம் எழவே, அவன் கடைத்தெருவை நோக்கி சைக்கிளைத் திருப்பினான். ஆனால் கந்துவின் கடை மூடியிருந்தது. அவன் 'திரும்புவோம்' என்று எண்ணி சைக்கிள் பெடலில் காலைத் தூக்கி வைக்கும் பொழுதே, கந்தனும் சம்மனும் கொடுத்த சரணதாஸ் அவ்விடம் வந்து விட்டான். அவன் ரமாநாத்தைப் பார்த்ததும், "என்ன, எசமான்! நம்மை மறந்தே போய்விட்டீர்களே! நம் பணத்தை எப்பொழுது தருவதாக எண்ணம்?" என்று கேட்டான்.

ரமாநாத் மிகவும் வினயமாக, "கூடிய சீக்கிரம் தந்துவிடுகிறேன். இப்பொழுது தான் கந்துவுக்குக் கொடுத்தேன். உனக்கு இந்தத் தடவை தந்து விடுகிறேன்!" என்றான்.

"அந்தக் கதை யெல்லாம் எனக்குத் தெரியும். கந்து கெட்டிக்காரத்தனமாக நடந்துகொண் டிருக்காவிட்டால், அவனும் எங்களைப்போல் வாயில் விரலை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியது தான். ஒரு வருஷம் ஆகப்போகிறது. ஒரு வட்டி என்று வைத்துக் கொண்டாலும் எண்பத்தி நான்கு ரூபாய் ஆகிறது. நீங்கள் நாளைக்கு வந்து கணக்கைப் பார்த்து விட்டுப் பாதித் தொகையாவது கொடுத்து விட்டுப் போங்கள்!"

"பொய் சொல்லுவானேன்! 'நாளைக்குப் பணத்துடன் வா' என்றால் என்னால் முடியாது. கணக்குப் பார்க்க வேண்டுமானால் வருகிறேன். என் சரணதாஸ், உன் முதலாளியிட மிருந்து, இப்பொழுது ஐந்நூறு அறுநூறு ரூபாய் வாங்கித் தர முடியுமா? உனக்கும் ஏதாவது தருகிறேன்!"

"நடக்காத காரியத்தைப் பற்றிப் பேசி என்ன பயன்? எங்கள் 'சேட்டு' ஒரு தம்பிடி கூடத் தரமாட்டார். அவர் உங்களைக் கோர்ட்டிலே இழுத்துவிடாமல் இருக்கிறாரே, அதுவே பெரிது. உங்களாலே நான் அவரிடம் தினம் பொழுது விடிந்தால் வசவு வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆமாம், பெரிய ஐயாவிடம் கேட்க வரட்டுமா?" என்று கேட்டான் சரணதாஸ்.

இதைக் கேட்டதும் ரமாநாத் ஆத்திரத்துடன், "உனக்குக் கொடுக்க வேண்டியவன் நான் இருக்கும்பொழுது பெரிய ஐயாவைக் கேட்கவேண்டியது அனாவசியம். நான் செத்துக் கித்துப் போய்விடவில்லையே! குதிர்மாதிரி இதோ இருக்கும் பொழுது உனக்கு ஏன் இப்பொழுதே அந்தக் கவலை?" என்று சொல்லி விட்டு, அங்கிருந்து நகர்ந்தான்.

அவனுடைய கண்களில் நீர் சுரக்கவில்லையே தவிர அவனுக்கு அழுகை அழுகையாக வந்து கொண்டிருந்தது. 'நம்மேல்தான் தப்பு! பத்மாவிடம் உண்மை நிலைமையைச் சொல்லாமல் இருந்ததனால் வந்த வினைதானே, இது! அவளோ விவரம் தெரியாதவள் அல்ல; உண்மை நிலைமை அவளுக்குத் தெரிந்திருந்தால் என்னை இப்படி யெல்லாம் கடனுக்கு நகை வாங்க விட்டிருப்பாளா? உண்மையில் அவள் தனக்கு 'இந்த நகை வேண்டும், அந்த நகை வேண்டும்' என்று வாய் திறந்து சொன்னதே யில்லை. நான்தான் பெருமைக்கு ஆசைப்பட்டு இப்படி யெல்லாம் குட்டிச்சுவரானேன்! 'இத்தனை பெரிய கடன் நம் தலைமீது சுமந்திருக்கிறதே, சிக்கனமாகச் செலவு செய்து கடனைத் தீர்க்க வழி செய்யவேண்டும் என்று கூடச் சிந்தித்ததில்லை. இந்த வருஷம் எனக்குக் கிடைத்த வரும்படி ஆயிரத்துக்குக் குறைச்சல் இல்லை. நான் சிக்கனமாகச் செலவு செய்திருந்தால் இரண்டு கடன்காரர்களுக்கும் பாதிப் பாதியாவது அடைத்திருக்கலாமே! எவ்வளவு ரூபாய் காலியாகி விட்டது? வண்டிக்காரனும் ஹோட்டல்காரனும் அல்லவா சாப்பிட்டு விட்டுப் போனார்கள்! இதை யெல்லாம் முன்பே யோசித்திருக்க வேண்டும், இப்பொழுது யோசித்து என்ன பயன்? நம் மூளையே மூளை! வாசற்படிக்குப் படுதா இல்லாமல்தான் குறையாக இருந்ததோ? இரண்டு மேஜை விளக்குகள் வாங்கினேனே, எதற்காக? கட்டில்கள் புதுப் பிரம்பு பின்னவில்லையே என்று அழுதனவா?' என்றெல்லாம் அவன் வழி நெடுக யோசித்துக் கொண்டே போனான்.

வீடு வந்து சேர்ந்ததும் பத்மா அவனைப் பார்த்து, "இத்தனை நேரம் எங்கே போயிருந்தீர்கள்?" என்று கேட்டாள்.

"நீ செய்த வேலை! நான் ரத்தன் வீடு வரை போய் வரும்படி ஆகிவிட்டது. பையில் இருந்த பணத்தை யெல்லாம் அப்படியே தூக்கி அவளிடம் கொடுத்து விட்டாயே! என் பணம் இருநூறு ரூபாயும் கூட அல்லவா அதில் இருந்தது!" என்றான் ரமாநாத்.

"எனக்கு என்ன, ஜோஸ்யமா தெரியும்? நீங்களும் சொல்லாமல் போய் விட்டீர்கள்! ஆனாலும் பாதகமில்லை; அவனிடம் இருந்தால் எங்கும் ஓடிப் போய் விடாது. நாளைக்குத் தானாக அனுப்பி விடுவான்."

"அது சரி; நாளைக்குக் கஜானாவில் பணம் கட்டியாக வேண்டுமே!"

"இருநூறு ரூபாய்தானே வேண்டும்? நான் தருகிறேன். என்னிடம் இருக்கிறது!"

ரமாநாத்துக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. "உன்னிடமாவது, பணம் இருக்கவாவது?" என்று அவன் அவநம்பிக்கை ததும்பக் கேட்டான்.

"உங்களுக்கு ஏன் அந்தக் கவலையெல்லாம்? உங்களுக்குப் பணம்தானே வேண்டும்? நான் தருகிறேனே என்று சொன்னால், அதோடு விடுங்கள்!" என்றாள் பத்மா.

அவள் குரலில் தொனிக்கும் தீவிரத்தைக் கண்டு ரமாநாத்தின் முகம் சற்று மலர்ந்தது. 'இவள் இருநூறு ரூபாய் தருகிறேன் என்கிறாள்; ரத்தனிடமிருந்து இருநூறு கிடைத்துவிடும்; என்னிடம் நூறு ரூபாய் இருக்கிறது. பாக்கி மூந்நூறு ரூபாய்தானே குறைகிறது? ஆமாம், அந்த மூந்நூறு ரூபாய்க்குத்தான் எங்கே போவது? ரத்தன் பூரா ரூபாயையும் கொடுத்தால்தான் நாம் கடைத்தேற முடியும். இல்லாவிட்டால் வேறு வழியே யில்லை. அவள் கொடுத்துவிட மாட்டாளா?' என்ற ஒரே ஒரு நம்பிக்கைதான் அந்தச் சமயம் அவனுக்கு உறுதுணையாக இருந்தது.

சாப்பாடு முடிந்து அவன் படுக்கச் சென்றதும் பத்மா, "இன்னும் உங்களுக்கு என்ன கவலை?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லையே! என்னைப் பார்த்தால் கவலைப்படுகிறவனாகவா தோன்றுகிறது!"

"இந்தக் கேள்வியை நீங்கள் திருப்பிக் கேட்பதிலிருந்தேதான் 'உங்களுக்கு ஏதோ கவலை இருக்கிறது' என்பது வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறதே!"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை, அசடே. நான் உன்னிடம் எதையாவது மறைப்பேனா?" என்று ரமாநாத் அவளைச் சமாதானப்படுத்தினான்.

அன்று இரவு தூக்கத்தில் பத்மா ஒரு பயங்கரக் கனவு கண்டு உரக்கக் கூச்ச விட்டாள். ரமாநாத் திடுக்கிட்டு, "பத்மா! பத்மா! ஏதாவது கனவு, கினவு கண்டாயா என்ன?" என்று தட்டி எழுப்பிக் கேட்டான்.

"என்னத்தைச் சொல்லுகிறது, போங்கள்! வந்து ... வந்து ... உங்களைப் போலீஸ்காரர்கள் பிடித்து இழுத்துக் கொண்டு போவதுபோலக் கனவு கண்டேன்! அப்பப்பா, என்ன கோரம் என்கிறீர்கள்?" என்றாள் பத்மா.

இதைக் கேட்ட ரமாநாத்துக்குத் தன் இரத்தமே உலர்ந்து போய் விட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. பத்மா நான்கைந்து நாட்களுக்கு முன்னால் அந்தக் கோரக் கனவைப் பற்றிப் பிரஸ்தாபித்திருந்தால், அவன் சிரித்துப் பேசி அதைக் காற்றில் பறக்க விட்டிருப்பான். ஆனால் இப்பொழுதோ, அவனையே அந்தப் பயம் சூழ்ந்து கொண்டது. ஆனால் வெளிக்கு மிகவும் தைரியவானைப் போலக் காட்டிக் கொண்டு, "அந்தப் போலீஸ்காரர்களிடம், 'இவரை ஏன் இப்படிப் பிடித்து இழுத்துக் கொண்டு போகிறீர்கள்?' என்று நீ கேட்டிருக்கக் கூடாதோ?" என்று சிரித்தவாறு கேட்டான்.

"உங்களுக்கு இது வேடிக்கையாக இருக்கிறது, சிரிக்கிறீர்கள்! என் மார்பு எப்படிப் படபட வென்று அடித்துக் கொள்ளுகிறது, தெரியுமா?" என்றாள் பத்மா.

பிறகு சிறிது நேரத்துக் கெல்லாம் ரமாநாத் தூக்கத்தில், "அம்மா! நீ இப்படியெல்லாம் பேசினால் நான் குளம் குட்டையில் விழுந்து உயிரை விட்டு விடுவேன். தெரியுமா? ஜாக்கிரதை!" என்று ஏதோ உளற ஆரம்பித்தான்.

பத்மா அவனைத் தட்டி எழுப்பி, "ஆமாம், என்னைப் பரிகாசம் செய்தீர்களே! கடைசியில் நீங்களே உளறிக் கொட்ட ஆரம்பித்து விட்டீர்களே! நீங்களும் ஏதாவது சொப்பனம், கிப்பனம் கண்டீர்களா, என்ன?" என்று கேட்டாள்.

ரமாநாத் வெட்கிப் போய், "ஆமாம், தலைகால் இல்லாத ஏதோ ஒரு கனவு கண்டேன். 'என்ன கனவு கண்டேன்?' என்று எனக்கே சரியாகப் புரியவில்லை" என்றான்.

"சரி, அப்படியானால் புரண்டு படுத்துக் கொண்டு தூங்குங்கள். மல்லாந்து படுத்துக் கொண்டாலே மனிதன் உளறுவானாம்!" என்றாள் பத்மா.

ராமநாத் புரண்டு படுத்துக் கொண்டான். அப்புறம் அவனுக்குத் தூக்கமே வரவில்லை. ஏதேதோ குருட்டு யோசனைகள் செய்தவாறு படுத்திருந்தான். மணி இரண்டு அடித்துவிட்டது. தண்ணீர் குடிப்பதற்காக எழுந்த பத்மா, "இன்னும் நீங்கள் தூங்கவில்லையா?" என்று கேட்டாள்.

"தூக்கம் கலைந்து விட்டதோ, இல்லையோ! அப்புறம் தூக்கமே வரவில்லை. 'உன்னிடம் இருநூறு ரூபாய் ஏது?' என்று யோசித்துக் கொண்டிருந்தேன். யோசிக்க யோசிக்க ஆச்சரியமாயிருக்கிறது!" என்றான் ராமநாத்.

"பிறந்தகத்திலிருந்து கொண்டு வந்த ரூபாய்கள்தாம் எல்லாம். அப்படியே செலவழிக்காமல் வைத்திருக்கிறேன்."

"அப்படியானால் நீ பணம் சேர்ப்பதில் பலே கைகாரிதான்! அதேமாதிரி இங்கேயும் நீ ஏன் சேர்க்கக் கூடாது?"

"நீங்கள் இருக்கும்பொழுது எனக்கு ஏன் அந்தக் கவலை?"

"வெளிக்கு இப்படிச் சொல்லிக் கொள்ளுகிறாயே தவிர, உண்மையில் 'இதுமாதிரி ஒரு தறுதலை நமக்குக் கணவனாக வந்து வாய்த்துவிட்டதே!' என்று என்னை மனதுக்குள் திட்டிக்கொண்டிருப்பாய்!"

"நன்றாய்ச் சொன்னீர்கள்! உங்களைத் திட்ட எனக்கு என்ன, பைத்தியமா பிடித்திருக்கிறது? உங்களைப் போன்ற புருஷனை அடைவதற்குப் பாக்கியம் செய்திருக்க வேண்டுமாக்கும்!"

அவளுடைய நெஞ்சுருக்கமான பேச்சைக் கேட்டு ராமநாத் உருகி விட்டான்! 'அன்பும் கருணையுமே உருவான இவளிடமா நாம் நமது ஏமாற்று வித்தைகளை யெல்லாம் காட்ட வேண்டும்? நாம் நேர்மையை விட்டு இவ்வளவு ஒளித்து மறைத்துப் பேசும் பொழுதே இவள் இவ்வளவு பிரியமாக இருக்கிறாளே! நாம் ஒளிவு மறைவை விட்டு இவளுடன் நேர்மையாகப் பழக ஆரம்பித்தால் நம்முடைய வாழ்க்கை எவ்வளவு ஆனந்தம் நிரம்பியதாக இருக்கும்!' என்று எண்ணும்பொழுது, அவனுக்கு மனதை என்னவோ செய்தது.

(தொடரும்)




### கவலை தீர்ந்தது!

முதல் நாள் பள்ளிக்கூட மைதானத்தில் நடந்த கிரிக்கெட் பந்தயத்தைப் பற்றி, மறு நாள் உபாத்தியாயர் கோபுவை ஒரு வியாசம் எழுதச் சொன்னார். "என்ன எழுதுவது?" என்று கோபு வெகு நேரம் யோசனை செய்து பார்த்தான்; ஒன்றும் தோன்றவில்லை. கடைசியில் பின்வருமாறு எழுதிவைத்தான்:—

"முதல் நாள் இரவு மழை பெய்து தரை ஈரமாயிருந்ததால், ஆட்டம் அடுத்த வாரத்துக்கு ஒத்தி வைக்கப்பட்டது!"

●

### தர்மசங்கடம்!

ஹோட்டல்காரர்:—நம்ம ஹோட்டல் அறைகளில் இருந்தால், வீட்டில் இருப்பது போலவே இருக்கும்; ஒன்றும் வித்தியாசமே தெரியாது!

வந்தவர்:— அப்படியானால் நான் போகிறேன். எனக்கு வீட்டிலிருப்பது போல் தோன்றவே கூடாது!

●

### காரணம்!

போலீஸ்காரன்:—யாரப்பா நீ, இந்தப் பட்டப் பகலில் ஜன்னல் வழியாக வீட்டுக்குள் நுழைகிறவன்?

அவன்:—இந்த வீட்டுக்காரன்தானுங்க! முன் வாசல் வழியா வரலாமுன்னா, அங்கே என் பெண்டாட்டி தண்ணீர் தெளிந்துக் கோலம் போட்டுக்கிட்டிருக்கா!

●

### அவர்களுந்தான்!

ஒருவர்:—நீங்கள் வட இந்தியாவுக்குப் போயிருந்தீர்களே, அங்கே அவர்களுடைய பாஷை தெரியாமல் ரொம்பவும் திண்டாடிப் போனீர்களோ?

மற்றவர்:—அவர்களுடைய பாஷை தெரியாமல் நான்மட்டுமா திண்டாடிப்போனேன்? என்னுடைய பாஷை தெரியாமல் அவர்களுந்தான் திண்டாடிப் போனார்கள்!

●

### வேண்டவே வேண்டாம்!

வக்கீல்:—இந்த வழக்கு சம்பந்தமாக என்னுடைய உண்மையான அபிப்பிராயத்தைச் சொல்லட்டுமா?

கட்சிக்காரன்:—வேண்டாம், வேண்டாம்! உங்கள் தொழில் முறை அபிப்பிராயத்தையே சொல்லுங்கள்!

●

### சிரமமில்லை!

"ஏண்டி, பங்கஜம்! உங்காத்துக்காரர் பொய் சொன்னால், நீ உடனே கண்டு பிடித்து விடுவாயோடி?"

"கண்டு பிடிப்பதற்கு என்ன இருக்கிறது! அவர் எந்த விஷயத்திலாவது உண்மை பேசினால்தானே?"

Regd No. M. 4392

License No. 18
Licensed to post without prepayme